உ

சிவகுருமயம்

# பழநித் தல வரலாறும் திருக்கோயில் வழிபாடும்

ஆசிரியர் :

ஜெ. எம். சோமசுந்தரம் பிள்ளை, பி. ஏ., பி. எல்.

வெளியிடுவோர் :

பழநிச் சைவ சித்தாந்த சபையினர்

கோயமுத்தூர் கூட்டுறவு அச்சுக்கூடம், லிமிடெட்

1948



விலை ரூ. 1

# யாத்திரிகர்களுக்குரிய குறிப்புக்கள்.

1. பழநி தென் இந்திய இருப்புப்பாதை வழியில், சென்னையினின்றும் திண்டுக்கல்-கோயமுத்தூர்க் கிளை வழியில், திண்டுக்கல்லிலிருந்து 36 மைலிலுள்ளது. தினம் திண்டுக்கல்-பொள்ளாச்சி-கோயமுத்தூர் வழியாக பழநிக்கு ஐந்து வண்டித் தொடர்கள் போக்கு வரத்து உண்டு.

2. பழநி ரயில் நிலையத்தில், ஏராளமான ஜட்கா, மாட்டு வண்டிகள் மலையடிவாரத்திற்கும், ஊருக்கும், சண்முக நதிக் கரைக்கும் போகவரக் கிடைக்கும். ரயிலடியிலிருந்து மலையடிவாரமும் ஊர்க்கோயிலும் ½ மைல், சண்முக நதி 2 மைல்.

3. யாத்திரிகர்கள் தங்க அடிவாரத்தில் ஏராளமாக மடங்கள், சத்திரங்கள் உண்டு. பழநி ஊர் மேற்கு ரதவீதியில் நாடார்களுக்கும், தெற்கு வீதியிலும், அடிவாரத்திலும், நகரத்தார்கள் வைசியர்களது, சௌராஷ்டிரர்களது விடுதிகளுண்டு. இவை தவிரச் சமீபத்தில், நவீன முறையில் உணவுக்கும், உறைவதற்கும் அறைகள் செல்லம் சண்முகானந்தா லாட்ஜ், ஸ்ரீ வெங்கிடேஸ்வரா லாட்ஜிங் ரயில் நிலையத்திற்கு அணித்தே மூன்று பர்லாங்கில் உள்ளன.

4. மலையிலும் ஊர்க்கோயிலிலும் தரிசனம் காவடி முதலிய பிரார்த்தனைகளைக் கூடவிருந்து செய்துவைக்கவும் பண்டாரங்கள் என்ற ஒரு தொகையினர் இருக்கின்றனர்.

5. இவை தவிர தேவஸ்தானத்தாரின் உதவி வேண்டும்போது கிடைக்கும். தேவஸ்தானத்தாரால், அபிஷேகம் செய்ய சுத்தமான பன்னீரும், பாலும் மலைக் கோயிலுக்குப் போகும் முதல் மண்டபத்தில் விலைக்கு கொடுக்கப்படுகிறது.

உ

சிவகுகமயம்

# பழநித் தல வரலாறும், திருக்கோயில் வழிபாடும்

ஆசிரியர் :

ஜெ. எம். சோமசுந்தரம் பிள்ளை, பி. ஏ., பி. எல்.

வெளியிடுவோர் :

பழநிச் சைவ சித்தாந்த சபையினர்

கோயமுத்தூர் கூட்டுறவு அச்சுக்கூடம், லிமிடெட்

1948



விலை ரூ. 1

## ஆசிரியரின் மற்ற நூல்கள்.

1. The Great Temple at Tanjore, 1935.
2. தஞ்சைத் திருக் கோயில்கள், 1939.
3. சோழர் கோயிற்பணிகள், 1939.
4. Palni, the Sacred Hill of Muruga, 1941.
5. பழநித் தல வரலாறு, 1944.
6. A Plan for Tiruchendur, 1946.
7. Five Tamil Idylls of Pathuppattu, 1947.
8. Tiruchendur, the Sea-Shore Temple of Subrahmanyam, 1948.

# காணிக்கை.

பழநித் தல வரலாறும், திருக்கோயில் வழிபாடும் என்ற இச் சிறுநூலை பழநி ஸ்ரீ ஞான தண்டாயுதபாணி சுவாமியின் திரு மென்மலர்ப்பாதங்களுக்கு உரிமையாக்குகின்றேன்.

இதனை அவரது பத்தர்களுக்கு உதவும் பேறு பழநிச் சைவ சித்தாந்த சபையினரதாகும். இச் சபையினர் செய்துவரும் அரும் பணிகள் சைவ உலகம் அறிந்ததே. இந்நூலைப் போன்றவையும், சமய உண்மைகளை எவரும் எளிதில் அறிந்துகொள்ளும் வண்ணமும் எழுதிய பல நூல்களை உதவுவார்களாக.

இந்நூலின் ஒரு சிறு பாகமாக திருக்கோயில் வழிபாட்டில் அன்பர்கள் அறிந்துகொள்ளவேண்டிய ஒரு பகுதியும் இணைத்துள்ளேன். அதனை அன்பர்கள் மேற்கொண்டு பயன் பெறுவார்களாக.

இந்நூலில் தோன்றும் பல புகைப்படங்கள் பழநி தேவஸ்தானத்தாரால் அன்புடன் உதவியவை. இன்னும் சில, "ஆனந்த விகடன்" ஆசிரியரவர்களின் அன்பளிப்பு. இவர்களுக்கும், இந்நூலை பண்படுத்து முறையில் உதவிய பெரியார்களுக்கும், வெளியிட்டு உதவும் பழநிச் சைவ சித்தாந்த சபை நிருவாகக் குழுவினருக்கும், இவை யாவற்றிற்கும் காரணகர்த்தராகிய உயர் திரு. வா. வே. கா. ரு. முருகேச முதலியார் அவர்களுக்கும் எனது நன்றி உரியதாகும்.

பழநி,<br>13—8—1948.

ஜெ. எம். சோமசுந்தரம்.

# அணிந்துரை.

---

"மூர்த்தி, தலம், தீர்த்த" மென்னும் முத்திறச் சிறப்பும் பெற்று விளங்குவது நமது தென்னுடு; ஆதலால், "மாதவஞ் செய்த தென்றிசை" எனவும், "பேசில், அத்திசை யொவ்வா பிறதிசை" எனவும், "தென்னுடுடைய சிவனே போற்றி" எனவும், தெய்வத் திருமுறைகள் முழங்குகின்றன. அங்ஙனமே இங்கே, பாருக்குள்ளே கலியுகத்திலே கண்கண்ட பரம தெய்வ மாக விளங்கும் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருத் தலங்களுள்ளே மேற்கூறிய முத்திறச் சிறப்பும் பெற்று விளங் குவது "பழநியம்பதி" "காசியின் மீறிய பழநியங்கிரி" என்று ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் போற்றிய பெருஞ் சிறப்பினை யுடையது. இதன் தொன்மை வரலாற்றை நவீன ஆராய்ச்சித் திறனுடனும், ஆலய வழிபாட்டுமுறை முதலிய இணைப்புக்க ளோடும் (முதற்பதிப்பையும்) இரண்டாமுறையாக இஞ்ஞான்றும் வெளியிட்டவர் இந்நூலாசிரியராகிய சைவத் திருவாளர் ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளையவர்களே; இவர்கள் பழநித் திருக்கோயிலில், முன்பு நிருவாக அதிகாரியாகவிருந்து செயற் கரும் பணிகள் பல புரிந்த மெய்யடியவர்; எஞ்ஞான்றும், ஆலயப்பணி; சமயப்பணியைத் தமது உயிரினும் சிறப்பாகப் போற்றி வருகின்ற பெரியார்; இவ்வருமையைத் தமிழுலகம் நன்கறியும்; அம்மட்டோ? அண்மையில் பழநியம்பதிக்குத் தரிசனார்த்தம் வந்தருளிய தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசிரிய சுவாமிகள் மகா சந்நிதானம் அவர்கள் நமது பிள்ளையவர்களுடைய சமயப் பற்றையும் பழநியம்பதியிற் செய் துள்ள தொண்டினையும் பாராட்டியுள்ளார்கள் என்றால், வேறு கூறுவதென்னுளது? பழநியம்பதி, திருமுருகன் திரு வடிக்குரிமையாக்கியது அப்பெருமானிடத்தில் தமக்குள்ள நிலை யான மெய்யன்பைப் புலப்படுத்துகிறது. அன்பர் வாழ்க பல் லாண்டு; அவர்கள் தொண்டு நின்று நிலவுக; இந்நூல், அன்பர்களுக்கு நலம் தருவதாக.

இங்ஙனம்,

**ஸ்ரீகாசிவாசி, ஈசானசிவாசாரியூர்,**

**பழநி.**

உ

சிவகுகமயம்

# பழநித் தல வரலாறு

ஆகம வேதப் பொதுஞான தேசிகனுகி நிற்கும்
ஏகனைத் தென்பழனிக்குவட் டேகண்டிறைஞ்ச வல்லார்
சாகர நீர்முழுதுண்டு விட்டானுந் தமிழ்க்கிளியும்
போக முனியும் புலிப்பாணிச் சித்தரும் போல்பவரே.

— தண்டபாணி சுவாமிகள்.

**திருமலையின் சிறப்பு.**

திருவருள் ததும்பியது தமிழகம். இங்கு இறைவன் அருள் விளக்கம் மிகுதியும் பெற்ற திருத்தலங்கள் பல. அவற்றுள்ளே தொன்மைச் சேரனும், தென்னவனுகிய பாண்டியனும் ஒருங்கு போற்றிய கொங்கு வைகாவூர் நாட்டுப் பழம் பதியாகிய பழநி, காலவரையறைக் குட்படாத பழமையும், பெருமையுமுடையது. இன்னும், தமிழ் இலக்கியங்களில் 'சித்தன் வாழ்வு' எனச் சிறப்பிக்கப்பெற்ற இத்தலம் சித்தர் போகரின் அருள் திருவிளையாடல்கள் நிகழ்ந்த இடமாகும். இங்கு அவரும் அவர் மாணவர் புலிப்பாணியின் குழாமும், உறைந்திருந்தனர். இத் திருமலையின்மீது போகரது கருணையால் எடுப்பித்ததே ஞான தண்டாயுதபாணியின் அருள் திருமேனியாகும். அக்காலம், காலவரையறையில் அகப்பட்டதன்று. அக் கால்தொட்டு, அத்திருமேனியைத் தரிசித்த மக்களின் பிறவிப்பிணியையகற்றி உலகப் பெரும்பேற்றில் இன்னும் என்றும் ஈடுபடுத்துவது.

**திருமலையின் அமைப்பு.**

பழநிப் பொருப்பினின்றும் சுமார் எழு கல் தூரத்தில் மேற்கு மலைத்தொடரின் மற்றொரு பகுதியாகிய கொடைக் கானல் மலையும், மற்றும் பல மலைத்தொடர்களும் பச்சைப் பசேலெனத் தோன்றி வெள்ளிய முகில்கள் மேலே தவழ்வனவாய் விளங்குவன. இப் பழநிமலைக்குச் சிறிது அணித்தே மற்றுமோர் சிறு குன்று இடும்பன் மலை எனப் பெயர்பெற்று நிற்கின்றது. இதனையடுத்து இடும்பன் குளம் 147 ஏ. 61 செ. நிலப்பரப்புள்ளது. இவை கடல் மட்டத்திற்குமேல் 1068 அடி உயர்ந்துள்ளவை. பழநி மலையின் உச்சியில் அதன் மணிமுடிபோல் முருகன் திருக்கோயில் விளங்குகின்றது.

**புராண வரலாறும் பழநிப் பெயர்க்காரணமும்.**

உமாதேவியாரும் சிவபிரானும் இளங்குழவியாகிய முருகனை "ஞானப் பழம் நீ" எனக் காதலோடு அழைத்தமை காரணமாக முருகன் வீற்றிருக்கும் இக்குன்றிறுக்கும் இப்பதிக்கும் பெயர், "பழம் நீ" என வழங்கப் பெற்று, பின் அச்சொல் மருவிப் "பழநி" என வழங்கலாயிற்றென்பர்.

மற்றொன்று, பழனங்கள் சூழ்ந்த இடம் பழனி என வழங்குவது என்றும் கூறுவர்.

**காலவரையறை.**

காலவரையறையில் பழநிப்பதி சங்க காலத்தை ஒட்டியது. திருமுருகாற்றுப்படையில் திருவாவினன்குடி எனவும், அகநானூற்றில் " முழவுறழ் திணிதோ ணெடுவேளாவி,



நாரத முனிவர் மாதுளம் பழம் தருதல்.



கணபதி, முருகன் ஆயகுமாரரை நோக்கி பரமசிவன் உலகை முதலில் வலம் வருவார்க்குப் பழம் தருவேனெனல்.

— பழநித் தல வரலாறு



முருகன் உலகை வலம் வருவேனென்று
மயில்மீதேறி வருதல்.



எல்லாம் ஆகிய அப்பனையும் அம்மையையும்
கணபதி வலம் வந்து பழம் பெறுதல்.



முருகன் மயில் மீதேறி வலம் வந்தும்
பழம் அண்ணன் கணபதியிடம் காணுதல்.





முருகன் முனிந்து ஆவினன்குடி அமர்ந்து ;
பின்பு பழநிமலை மீது எழுந்தருளல்.




ஆவினன் அமர்ந்த முருகவேளை உமாதேவியார் வாரியெடுத்து
மார்புறவணைத்து, உன்னையன்றி மாதுளங்கனிக்கு
ஓர் சுவையுண்டுமோ? "பழம் நீ" என்று
உலகறியக் காட்டுதல்.

—பழனித் தல வரலாறு.

பொன்னுடை நெடுநகர்ப் போதினி" (அகம். 61); "முருகனற் போர் நெடு வேளாவி, யறு கோட் டியானைப் போதினி யாங்கண்" (அகம். 1) என இரண்டு இடத்திலும் "போதினி" எனவும்; சிலப்பதிகாரத்தில் அதன் அரசனை "வேளாவிக்கோ மாளிகை காட்டி" (சிலப். 28–198) எனவும், குறிப்புக்கள் காண்பதாகின்றன. ஆதலின், இத்தலம் முறையே தமிழ் மூவேந்தர்களாலும், 12, 13, 14-ஆம் நூற்றாண்டுகளில் கொங்கு சோழர்களாலும், 15, 16, 17-ஆம் நூற்றாண்டுகளில் பிற்காலப் பாண்டியர்களாலும், விஜய நகர ஆட்சியின்கீழ் மதுரை நாயக்க மன்னர்களாலும் ஆளப்பெற்று, 18-ஆம் நூற்றாண்டில் மைசூர் அரசின்கீழ் திண்டுக்கல் மாகாணமாக 25 பாளையங்களில் ஒன்றாகயிருந்தும், 1792-ஆம் ஆண்டில் நான்காவது மைசூர்ப் போருக்குப்பின் ஆங்கில அரசின்கீழ் வந்ததாகும்.

**பழநித் தலம்.**

பழநித் தலம் சேரர், கொங்கு நன்னாட்டைச் சேர்ந்ததன் காரணமாக முன்பு கோவைச் சில்லாவின் பகுதியாக இருந்தது. சமீபத்தில் இவ்வூர் மதுரைச் சில்லாவில் சேர்க்கப்பட்டு பழநித் தாலூகா என்ற பகுதிக்குத் தலைநகராக விளங்கிவருகிறது. தென்னிந்திய நேர் இருப்புப்பாதையில், திண்டுக்கல்லிலிருந்து போதனூர் கிளைப்பாதை பிரிந்து, பழநி வழியாக பாலக்காடு—கோயமுத்தூர் செல்லும் ரயில் வசதியுள்ளது. இவ்வூரிலிருந்து மதுரை, கொடைக்கானல், கரூர், தாராபுரம் முதலிய பல இடங்களுக்கும் மோட்டார் வசதியுள்ளது. இரயிலடியிலிருந்து மலை அடிவாரத்திற்கு சுமார் அரைக் கல் தூரமாகும். இப்பழநியம்பதியில் 1886-ம் ஆண்டு முதல் நகராண்மைக் கழகம் (Municipality)

ஏற்பட்டும், 1935-ல் மின்னொளி வசதி (Pykara-Electric-System) யும், 1931-ல் கொடைக்கானல் தண்ணீர் வசதியும் (Water-Supply) ஏற்பட்டுள்ளன. இதன் 1941-ஆம் ஆண்டு (Census) ஜனத் தொகை 24,706.

**திருமடங்கள்-சத்திரங்கள்.**

இப்புண்ணியப்பதியின் எம்மருங்கும் ஒவ்வொரு வகுப்பினரும் தங்கள் தங்களுக்கெனவும், பக்தர்களின் வசதிக்காகவும் கட்டிவைத்துள்ள பெரிய மடங்களும்; இவை தவிர சமீபத்தில் மலை அடிவாரம் பொன்னகரத்தில் திருவாளர் நீலகிரி, கேத்தி, கெ. ரங்கே கவுடரும், நஞ்சுண் டாபுரம் ந. கோவிந்தசாமி நாடாரும், அருட்சோதி வீதி யில், காளையார்மங்கலம், இ. ராம. வி. ரா. வீரப்ப அம்பல காரர், பீளமேடு, பி. எஸ். ஜி. கங்கா நாயுடு, ஈரோடு, வ. வே. கா. ரு. முருகேச முதலியார், உடுமலை, கணபதிப்பாளை யம், டி. ஆர். நாராயணசாமி நாயுடு முதலிய சிவநேயர்கள் கட்டியுள்ள பல அருமையான பொது அற நிலையங்களும் உள்ளன.

**ஊர்க்கோயில்கள்.**

திருமலைமீதுள்ள முருகன் திருக்கோயில் தவிர, மலை யின் அடிவாரத்தில், திரு ஆவினன்குடிக் கோயிலும் ஊரின் பழமைப் பாகத்தே பெரியநாயகியம்மன் திருக்கோயிலும், மற்றும் இலட்சுமிநாராயணப்பெருமாள், வேணுகோபால னுக்கு இரண்டு கோயில்களும், மாரியம்மன் கோயில், பட்டத்து விநாயகர் கோயில் முதலிய இன்னும் அநேக சிறு கோயில்களும் உள. ஊருக்கும் மலையடிவாரத்திற்கும் நடுவண் அமைந்துள்ளதும் 297 ஏ. 72 செ. பரப்புமுள்ள

# பழநி மலையும், இடும்பன் மலையும்.



அகத்தியர் சிவபெருமானையும் உமாதேவியாரையும் பூசிக்க விரும்பி கந்தகிரியிலுள்ள இரண்டு இணைபிரியாத மலைகளை கேட்டுப் பெறுதல்.





அகத்தியர் பூர்ச்ச வனத்திலே இரு மலைகளையும் சிவ சக்தி வடிவாகப் பாவித்து பூசிக்கும் பொழுது இடும்பா சூரன் தன் மனைவியுடன் முனிவரைச் சந்தித்து ஆட்கொண்டருள வேண்டுதல்.

இணைப்பு—பழநித்தல வரலாறு



அகத்தியர் ஆக்ஞைப்படி இடும்பாசுரன் மலைகளை தூக்கிக்கொண்டு பொதிகை நோக்கிப்போதல்.

இடும்பாசுரன் பொதிகைக்கு நேர் வழி தெரியாது மயங்க செவ்வேள் வழி காட்டல்.





இடும்பன் இளைப்பாற, மலைகளை கீழே வைத்தல்; களைப்பாரிய பின் சுமையைத் தூக்கிச் செல்ல முயற்சித்து அசைக்க முடியாது அயர்வுறுதல்.



காரணம்: சுமையாகிய மலை மீது கனிவாய்ச் சிறுவன் குரா மரத்தினருகில் தனியே நிற்கக்கண்டு இடும்பன் சண்டைக்கு ஆயத்தமாகுதல்.





குழந்தை வேலர், மலை தனது இனிய இருக்கை யெனக்கூற, அசுரன் சினந்துபாய, தண்டாயுதத்தால் கொல்லப்படுதல். இடும்பி மாங்கல்ய பிச்சை கேட்டல்.

குமரனின் அருளால், இடும்பன் உயிர்ப்பித்தெழுந்து, இத்திரு மலையிலிருந்து தண்டாயுத பாணிக்கு திருத்தொண்டு புரிய கடாக்ஷித்தருள வேண்டி வரம் பெறுதல்.



மலைப்படிகளில்
குராவடி வேலவர், இடும்பன்
சந்நிதிகள் காண்க :

வையாவிபுரிக்குளமும், அதனையடுத்த பல ஏரிகளும், நீர் நிலையங்களும், மாரிகாலத்தில் நீர்ப் பெருக்கினால் கடல் போல் பரந்து நிற்கும் தோற்றம் மிகவும் அழகியதாகும்.

**பழநி மலையும் இடும்பன் மலையும்.**

**புராண வரலாறு:—** பழநி மலையும் இடும்பன் மலையும், சிவ கிரி, சத்திகிரி எனக் கயிலாயத்திலிருந்ததாகவும், சிவபெருமான் அவைகளை அகத்திய முனிவருக்குக் கொடுக்க, அவைகளைப் பொதிகைக்குக் கொண்டுபோக நினைந்து அவர் இடும்பாசுரனுக்கு ஆணையிடவும், அவைகளைக் கொண்டுபோகும் வழியில் களைப் படைந்து இப்போதிருக்கும் இடத்தில் அவைகளை இடும்பன் இறக்கிவைக்க, அங்கு முருகன் கருணையினால் இவ்விடமே பொருந்தியதென்றும், இடும்பன் அதன் காரணம் நோக்கும் போது சிவகிரியின்மீது முருகன் கனிவாய்ச் சிறுவனாக குரா மரத்தின் கீழ் தோன்றவும், அசுரனுக்கும் இளஞ்சேய்க்கும் போர் நிகழவும், அசுரன் உயிர் நீப்ப, இடும்பியின் முறையீட்டால் உயிர் மீண்டும் பெறவும், அவன் பெற்ற இரு வரத்தால்: ஆண்டவன் மலையில் இடும்பன் சந்நிதியென்ற இடத்தில் வாயில் காவலனாக ஒரு இடம் பெற்றும், தான் இரு மலைகளையும் எடுத்து வந்தது போன்று காவடியுடன் தமது பிரார்த்தனைகளைக் கொண்டுவரும் அடியார்கள் முருகன் அருள் பெறவேண்டுமென பிரார்த்தனையும் கைவரப் பெற்றானென்பதும் புராணக் கூற்று. இதன் ஓவிய விளக்கம் காண்க.

**மலைக்கோயிலின் காலம்.**

மலைமீதுள்ள பெருமானின் திருமேனியானது போக சித்தர் ஆக்கியதன் காரணமாக அக்காலம் நிர்ணயிக்கமுடி யாததாகின்றது. ஆயினும் அவர் கோயில்கொண்டருளும் திருக்கோயில் எடுப்பித்த காலத்தை மட்டும் சில சான்றுக ளால் குறிக்கலாகும். போகரது கோயில் சேரநாட்டு மக்க ளது பேருணர்ச்சியையும், ஆர்வத்தையும் பெற்றது. ஆத லின் அந்நாட்டு அரசர் சேரமான் பெருமாள் அதனைக்கண்டு

உள்ளம் மகிழ்ச்சிறப்ப இக்கோயிலை எடுப்பித்தார். மலை ஏறும்போது எதிர் நிற்கும் முதல் சிற்றாலயம் சேரர் விநாயகரதாகும். அதன் வாயிலிலுள்ள ஒரு தனிக்கற்சிலையில் சேரர் கோன் தன் குதிரைமீது விளங்குகின்றான். மலையின்மீது கருவறை வடப்பக்கத்துச் சுவற்றிலும் சேரர்கோன் தன் குதிரைமீது செல்லும் தோற்றம் பொறித்துள்ளது. குதிரை மீது தோன்றும் சேரனே தம்பிரான் தோழராகிய சுந்தர மூர்த்தி நாயனாரது தோழர். சுந்தரமூர்த்தி வெள்ளை யானையின்மீது கைலாசம் செல்ல, அவர் தோழராகிய இச் சேரமானே தமது குதிரைமீது அவரைப் பின் தொடர்ந்து சென்று இருவரும் கைலாசத்தில் இவ்வூனுடம்பினுடன் கைலாசபதியின் அருள் பெற்றவர்கள். இவ்விருவர் காலம் 9-ஆம் நூற்றாண்டென ஆராய்ந்துள்ளனர். ஆதலின் சேரமானால் தொடங்கப் பெற்ற இவ்வாலயம் நாளடைவில் பாண்டியர்களாலும், கொங்கு சோழர்களாலும் பல பக்தர்களாலும் புதுப்பிக்கப்பட்டும், பல மண்டபங்கள் நூதனமாக அமைக்கப்பட்டும் இக்காலத்தே தோன்றும் அளவு பெருகியுள்ளது.

**கல்வெட்டுக்கள்.**

மலையில், பழநிப் பெருமான் கருவறையின் தெற்கு வடக்குச் சுவர்களிலும், வியாழ வரிசைகளிலும் மூன்று பக்கங்களில் எட்டுக் கல்வெட்டுக்கள்* காணப்படுகின்றன. அவை 13-ம் நூற்றாண்டில் ஆட்சி செய்த கோனேரின்மை கொண்டான் வீரபாண்டியதேவன், 15-வது நூற்றாண்டின் மைசூர் வீர நஞ்சைய உடையார், விஜய

---

*Inscriptions 609—12 of 1893; 371—3 of 1904.




பழநிமலை அடிவாரம் வெளித்தோற்றம்.

நகரத்து கிருஷ்ணதேவராயரதும் இன்னும் சில சமீப காலத்தவையுமாகும். மேற்குறித்த அரசர்கள் ஆண்டவருக்குரிய அன்றாடக வழிபாட்டிற்குரிய பொருள்களுக்காக, நன்செய், புன்செய், தோப்பு முதலிய நிலங்களும், திருநந்தாவிளக்கு, திருவமுது, திருமஞ்சனம், பூமாலை முதலியவைகளுக்காகவும் நிபந்தங்கள் ஏற்படுத்தியவை காணப்படுகின்றன.

**பழநி மலையும், திருப்பணிகளும்.**

பழநிப்பெருமானது திருமலை ஊர் நிலப்பரப்புக்குமேல் 450 அடி உயரமுடையது. ஏறிச்செல்லும் படிகள் 659 ஆகும். அவை 1926-ஆம் ஆண்டில் தொடங்கி ஏழு ஆண்டுகளாக சுமார் இலட்சம் ரூபா செலவில் 1931-ல் புதுப்பிக்கப்பட்டவை. அவைகளை சமீபத்தில் பல அன்பர்களின் பேருதவியாலும், சிறப்பாக நீலகிரி, ஜகதாலா, ராவ் பகதூர் ஜெ. பி. முத்தா கவுடர், குன்னூர் இ. வி. பத்து ஐயர் சி. பால்சந்த் லால்சந்த் சங்கர்லால் அவர்களாலும் ஒன்றரைப் பங்கு அகலமாகச் செய்து முடித்துள்ளனர். இது தவிர, வெயிற்காலங்களிலும், மழைக்காலங்களிலும் மலைப் படி ஏறிச்செல்லுவோர் ஒதுங்குவதற்கும் களைப்பைத் தீர்த்துக்கொள்ளுவற்கும் அமைந்துள்ள திருவாளர்கள்: மதுரை, புளியடி அ. ப. குப்புசாமி ஐயரவர்கள், மாயவரம் சேலக்கரை அருணாசல உபாத்தியாயரவர்கள், ஈரோடு வ. வே. கா. ரு. முருகேச முதலியார் அவர்களதான மூன்று மண்டபங்கள் இருந்தன. மற்றும் 1943-44 ஆண்டில் திருவாளர்கள் பீளமேடு திவான்பகதூர் பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள், சென்னை திவான்பகதூர் கரு. திருவேங்கட முதலியாரவர்கள், சுண்டக்காய்முத்தூர் கே. ஏ. பி. பழநிசாமி செட்டியாரவர்கள், சமுத்தூர்பாளையகார



பழநி ஊர் நிலப்பரப்பு.



கேத்தி. ரங்கே கவுடர் மின்சார மணி மண்டபம்.

ரவர்கள், கோவை டி. எஸ். சிவசுப்பிரமணியம் செட்டியாரவர்கள், சென்னை திவான் பகதூர் சி. என். குப்புசாமி ஐயரவர்கள், கோவை தி. அ. இராமலிங்கம் செட்டியாரவர்கள், பொள்ளாச்சி, பிலிச்சின்னம்பாளையம் ப. கிருஷ்ணசாமி நாடாரவர்கள், பீளமேடு பி. எஸ். ஜி. கங்கா நாயுடு அவர்கள், கோவை எஸ். கணபதி ஐயரவர்கள் முதலோராகிய அறநெறிப் பெரியோர்கள் இன்னும் பத்து மண்டபங்களையும் பூர்த்தி செய்துள்ளனர்.

அன்பர் கேத்தி, திரு. கெ. ரங்கே கவுடர் அவர்கள் அடிவாரத்தில் பக்தர்களுக்கெனக் கட்டியுள்ள அரிய மடாலயம் தவிர, மலைமீது மின்சார கடிகாரம் வைத்துள்ள மண்டபம் ஒன்றும் கட்டி, 20—3—1942-ல் தேவஸ்தானத்திற்கு அதனை உரிமையாக்கியுள்ளார்கள். சமீபத்தில் 16–9–1943-ல் உடுமலை, பழநி ஆண்டவர் மில்ஸ், லிமிடெட் உரிமையாளர்களால் மலைமீது வித்தியாதர மண்டபம் என ஒரு அணிதிகழ் மண்டபம் அமைத்து, திறப்பு விழா நடந்துள்ளது. இன்னும் திருவாளர்கள் சென்னை, அ. திருப்பதி நாயுடு அவர்களும், கோவை அ. ரங்கே கவுடர் அவர்களும் மலைப்படிகளில் பக்தர்களின் வசதிக்கான இரண்டு இளைப்பாறும் இடங்களை அழகாக அமைத்துள்ளார்கள். ஆண்டவன் தரிசனத்துக்காக வரும் அன்பர்களுக்காகும் பல வசதிகளில் இவைகளும் சிறந்தவையாகும். மலைக்கோயில் இராஜகோபுரம் நாளடைவில் உலைவினமாக, அதனைப் புதுப்பித்து இராஜகோபுர கும்பாபிஷேகம் 11—7—1940-ல் தேவஸ்தானத்தாரால் இனிது நடந்தேறியது.

**மலைக்கோயில்.**

மலைக்கோயிலுக்குச் செல்வோர் முதலாவதாக அடிவாரத்திலுள்ள பாதவிநாயகர் கோயிலை வலம்வந்து, கிரிவீதி

சுற்றியும் மலைமேற்செல்லுவார்கள். பழநிக் குன்றினைச் சுற்றி அழகியதொரு கிரிப்பிரகாரம் உண்டு. அது ஏறக் குறைய ஒன்றேகால் மைல் சுற்றளவுடையதாகும். அதன் இருமருங்கிலும் அழகிய கடம்பு முதலிய பலவகை மரங்களுடனும் வீதிகளின் நாற்புறத்திலும் நான்கு மயில் மண்டபங்களாலும், தொடர்ந்த வரிசையில் பொருந்திய ஆண்டவன் நூல் நிலயமாகிய பங்குனித்தேர் மண்டபம், இன்னும் பல மடாலயங்கள் முதலியவைகளாலும் சிறந்து விளங்குவதாகும். இன்னும் ஆங்கு மதுரைவீர சுவாமி, ஐம்முக விநாயகர், சந்நியாசியப்பன், அழகிய நாச்சியம்மன் முதலியோர் ஆலயங்களும், நாகமநாயக்கரது திருமூர்த்திகள் பிரமதீர்த்தம், நந்தவனங்கள், தேவஸ்தான விடுதி, சாது சுவாமிகளது சண்முக விலாசம் என்ற அன்னதான சமாஜ மடம், ஹரிஜன சேவா சங்கத்தாரது நந்தனார் விடுதி முதலியன உள. கிரிவலம் வந்ததும் அடிவாரப் பக்கத்தே மீனாட்சியம்மையார் திருமண்டபம் காணத் தக்கது. இதன் வாயிற்பாங்கே பழநி வைகாவூர் நன்னாட்டை ஆண்ட பாளையக்காரர்கள், அவர்களின் பத்தினிமார்கள் ஆகியவரின் உருவச்சிலைகள் திகழ்கின்றன.

திருமலைக்கோயில் மேற்குத் திசையினை நோக்கியதாகும். திருவாயில் அடைந்த பின்பு கட்டைக் கோபுர வாயிலும், அதன் அணித்தான சுப்பிரமணிய விநாயகர் சந்நிதியும் இருமருங்கும் நாயக்கர் மண்டபமும் தோன்றும். இன்னும் வைசியர் மண்டபம் தாண்டி, ஐந்து நிலை மாடங்கள் பொருந்திய இராஜகோபுரம் கடந்து இரண்டாம் பிராகாரம் அடைவர். அங்கே 42 கற்றூண்கள் தாங்கிய பாரவேல் மண்டபம் முன்னே காட்சியளிக்கும். இது ஒரு அழகிய அணி மண்டபம். கற்றூண்கள் வேலைப்பாடுடையன.




பழநிச் சுற்றுக்கோயில்களை எடுப்பித்த சமீன்தார்களது சிலைகள்.
மீனாட்சியம்மன் கோயில் மண்டபம்.



பழநி மலைக்கோயில் கும்பாபிஷேகம் 1940.



பழநி ஆண்டவர் முன்னணி மண்டபம்.

அவைகளுள் பீமசேனன் புருஷா மிருகத்துடன் போராடு வதும், மற்றும் நாயக்கர், பாளையக்காரர் பலரது உருவச் சிலைகளும் குறிக்கத்தக்கன. [படம் பார்க்க] இதனை ஒட்டிய வாத்திய மண்டபத்தில் தேவாலய காரியாலயம் உள்ளது. இதற்கு எதிரே தக்ஷிணாமூர்த்திக்கும், அதன் மருங்கே மலைக்கொழுந்து சிவன், அம்மனுக்குமாக மூன்று திருத்தளிகள் உள. திருமலையின் இப்பாகமே இம்மலையின் சிகரமென்பர்.

இதற்கடுத்த திருவாயில் துவாரபாலகர்கள் காப்புடையது. இங்கு நுழைந்ததும் மகாமண்டபம். இங்கு பக்தர்கள் பரவசத்தினால் இருமருங்கிலும் நின்று இறைவனை தரிசித்து ஈடுபடுதற்கமைந்தது. இம்மண்டபத்தின் 12 கற்றூண்களும் மிக வேலைப்பாடுடையனவே. உள் நுழைந்ததும், இடப் பக்கத்திலேயே கல்மேடைமீது நவவீரர், நடராசர், சிவகாமியம்மை, அருணகிரியார் திருவுருவங்களுள்ளன. பின்னும் அதற்கடுத்து ஆண்டவன் பள்ளியறையும், சண்முகநாதர் திருச்சந்நிதியும், அதனையடுத்து திருவுலாப் போதரும், சின்னக்குமரர் திருச்சந்நிதியையும் போற்றி ஆண்டவனை அணுகும் அணிதிகழ் மண்டபத்தில் முருகப்பெருமான் சந்நிதியை அடைவர்.

**திருமுருகன் சந்நிதி.**

இதுதான் ஆண்டவனது கருவறைக்கடுத்த முன்னணி மண்டபமாகிய அர்த்த மண்டபத்தின் திருவாயில். ஆண்டவன் ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி

"பிடர்பிடந்த புன்குஞ்சியும் பெருகிய கருணைக்
கடலலம்பு கண்களுங் கவினொழுகிய முகமும்
வடிவு நூலு மார்புங்கை யொண்கோலும் வயங்க
நெடியகோ வணவுடையு டனின்றது கண்டான்." என்றபடி




திருமலை பாரவேல் மண்டபம்.

மேற்கு நோக்கிய நின்ற திருக்கோலம். அங்கிருந்தே அவ்வண்ணலின் இணையற்ற ‡ திருமுகமும் அருள் கனிந்ததிருநோக்கமும், புன்னகை தவழும் திருவாயும், மாதாணி துலங்கும் திருமார்பும், ஒல்லிய அரையின் வைத்த இடக்கரத்தின் செவ்வியும், திருத்தாள்களின் பொலிவும், திருத்தண்டைகளின் அழகும் காண்போரைப் பரவசம் அடையச் செய்யும். அன்பர்கள் பலப்பலவான திருக் கோலங்கள் புனைந்து நோக்குந்தோறும், நோக்குந்தோறும் புதிய புதிய திருமுக மண்டலப் பிரகாசத்துடன் விளங் குவார். அன்பர்க்கெளிய ஆண்டவன், அவர் பக்தர்கள் வியப்புற நடிப்பது வியப்பன்றே. ஆண்டவனின் திரு மேனி போக முனிவரால் ரசக்கட்டால் செய்த நவ பாஷாண மெனப்படும் ரச (லிங்க) மூர்த்தம் ஆகும். ஆண்டவனின் மேற்கு நோக்கிய காரணத்தாலன்றோ மலை யாள நாட்டின் அளவற்ற செழிப்பும், எழிலும் என்பர்.

இக்கோயில் எழுந்த காலத்தே, பழநிமலை போக சித்தருக்குரிய உறைவிடமாயும், அந்த சித்துக்களால் மக்கள் பெரு நன்மையடைந்த இடமாயும் விளங்கியிருத்தல் வேண்டும். ஆனதால் உடலுக்குறுதிதரும் மருந்து வகை களையும், அவற்றிற்குரிய மருத்துவ நூல்களையும் ஆக்கிக் கொடுத்த அவ்வித்தக யோகசித்தர்கள், மக்கள் உயிர்கள்

---

‡ "பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு, ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிரொளி" — **முருகாற்றுப்படை**; "இளம்பரிதி நூறுயிரங்கோடி போல, வளந்தரு தெய்வீக வடிவம்" — **கந்தர் கலி வெண்பா**; "நினைவார்க் கின்னங்களையுங் க்ருபை சூழ் சுடரே" — **அநுபூதி**; "மேலை வெளியில் ஒளிரும் பரஞ்சுடர்" "கிரிராஜ தீப மங்கள ஜோதீ" — **திருப்புகழ்.**

மறுமைப் பயனை அடையவேண்டுமென்று கருதி ஒப்பற்ற இறைவனைத் தமது உள்ளத்தின் பேராற்றல்கொண்டு (நவபாஷாணத்) திருமேனியிடத்து நிலைபேறு செய்தருளினர் போகர். இப் பாஷாணக்கட்டினால் செய்யப்பட்ட திருமேனிமீது அபிஷேகிக்கப்பெறும் பால், தேன், சந்தனம் முதலிய பொருள்களைப் பருகுபவர் தமக்குள்ள பல நோய்கள் நீங்கப்பெற்று நலமடைகின்றனர். எண்ணற்ற பிறவிகளை எடுத்துழலாமல் அப்பிறவிகளையே அறுக்கும் ஆண்டவன் உடற்பிணியை அறுப்பது வியப்போ!

**சிவமறையோர் வந்த காலம்.**

போகசித்தராலே பிரதிட்டிக்கப்பெற்ற ஸ்ரீ ஞான தண்டாயுதபாணி சுவாமியின் திருமேனித் தொண்டர்கள் (அருச்சகர்) முறையே அவரும், அவர் மாணவர் புலிப்பாணியும், அவருக்குப் பின்னர் அவர் வழித்தோன்றல்களான பரம்பரைச் சைவ மரபினராகவும் இருந்தனர். ஆனல் மதுரை நாயக்க வமிச திலகரான திருமலை நாயக்க மன்னரது (1623-1659 கி. பி.) தளவாய், ராமப்ப அய்யன் இங்கு தரிசனத்திற்கு வந்திருக்கும் சமயம் பிராமணரல்லாத அருச்சகரிடம் தீர்த்தப்பிரசாதம் வாங்க மனமில்லாது, அப்போது உள்ள பூசகர்களை நீக்கி, ஆதிசைவ மறையோர்களைத் தருவித்து அவர்களையே பூசகர்களாகவும் முன்னவர்களைத் திருவணுக்கத் தொண்டர்களாகவும் நியமித்தார் என்ற விபரம் ஒரு செப்புப் பட்டயத்தால் காணக்கிடக்கின்றது. (இதன் நகல் ஒன்று இணைப்பில் காண்க) அப்புலிப்பாணி வகையினரே இப்போதும் போகர் சந்நிதியைப் போற்றிப் பூசித்து வருகின்றனர்.

**மலைச்சுற்றுக் கோயில்கள்.**

போகர் சந்நிதி மலைமீது உட்பிரகாரத் தென்கிழக்கு மூலையிலுள்ளது. அவர் பூசித்த புவனேஸ்வரி அம்மையின் திருமேனி இன்றும் பூசையிலுள்ளது. இவ்விடத்தேதான் போகர் சமாதியிலிருந்தாரெனக் கூறுவர். இதனின்றும் தண்டாயுதபாணிப் பெருமான் திருவடி நிலைக்கு ஒரு சுரங்க வழி இருப்பதென்றும், கடைசி முறையாக இதனுட் சென்ற போகசித்தர் திரும்பிவராது அங்குள்ளார் என்றும் சொல்லப்படுகிறது. இன்னும் இக்கோயிலின் தென்பாகத்தில் கன்னிமார் என்னும் சப்த கன்னிகைகளின் சந்நிதியும், கோபுரவாயிலையடுத்து வடபுறம் ஈசுவரன், அம்மன் கோயிலும், கோயில் உட்பிரகாரத்து ஈசானிய மூலையில் நவவீரர்களுக்கு சந்நிதியும் உள்ளன. இப்பிராகாரத்தின் தென்பாகத்தில் கைலாசநாதருக்கு ஒரு திருத்தளியும், அதற்கடுத்து சண்டேசுவரர் திருச்சந்நிதியும் உள்ளன.

**திருவாவினன்குடிக் கோயில்.**

"காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்டு மாலுற
ஆவினன் குடிவரும் அமலற் போற்றுவாம்.

— கச்சியப்பர்.

திருவாவினன்குடிக் கோயிலே இப்புராதனத்தல ஆதிக் கோயிலாகும். இதனையே நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் முருகனின் மூன்றும் படைவீடாகப் போற்றியுள்ளார்.* இத்தலத்திலே முருகப் பெருமான் மயில்மீது

* **திருவாவினன்குடி** என்ற பெயருக்குக் காரணங்கள் பல உள. திருமகள் (இலக்குமி); ஆ - காமதேனு; இனன் - சூரியன்,



திருஆவிநன்குடிக் கோயில்.

அமர்ந்த குழந்தை வேலாயுத சுவாமி என்ற பெயருடன் விளங்குகின்றார். காலவரையறைக்கெட்டாத இக்கோயில் சுமார் 37 ஆண்டுகட்கு முன்னர் காரைக்குடி நா. மு. சுப. லெக்ஷ்மணன் செட்டியார் குடும்பத்தாரால் சிறப்ப முறையிலே புதுப்பித்து 1910-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 25-ஆம் நாள் ஷை குடும்பம் காரைக்குடி நா. மு. சுப. ராம. சுப்பிரமணியன் செட்டியார் அவர்களால் கும்பாபி ஷேகமும் நடந்தேறியுள்ளது. இதன் திருப்பணி பாராட் டத்தக்கதே. ஆனால், பழமையான இக் கோயிலின் கோபுரமும் முன் மண்டபமும் புதுப்பிக்காமலே நின்றுள் ளது. அதனைச் சமீபத்தில் திரு ஆவினன்குடி திருப்பணி கர்த்தர்கள் நா. மு. லெ. அவர்கள், திரு. நா. மு. சுப. ராம. சுப. இராமநாதன் செட்டியார், B. Sc., அவர்கள், அக்குடும்பத்தார்களாலும் தொடங்கப்பெறுமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது. முருகன்வேள் அருள் புரிவாராக. இவ்வாலயத்தில் பல புராதனக் கல் வெட்டுக்கள் இருந் திருத்தல்வேண்டும். அவைகளின் அருமை தெரியாது திருப்பணி காலத்தில் யாவும் கல்லுளியால் செதுக்கப் பட்டும் வெவ்வேறாக பிரிக்கப்பட்டிருத்தலும் வருந்தத் தக்கவையாகும்.

தமிழ்மக்கள் செய்துள்ள நல்லறங்கள் என்றும் சிதை யாது நடைபெற வேண்டுமென்ற நல்லெண்ணத்துடன் அவை இன்னின்னவென்றும், அவை நடைபெறுவதற்குப்

---

கு - நிலமகள். டி - அக்னி என்ற ஐவர் தொழுது பேறுபெற்ற தலம் என்பதாம். இதற்குச் சான்றாக இக்கோயில் உள் மண்ட பத்தின் தென்மேற்குப் பக்கத்தில் மேல் கூறப்பட்ட ஐவருக்கும் கற்படிமங்கள் கீழ்மேல் வரிசையில் ஒரு மேடையில் நிலைநாட்டப் பெற்றிருத்தலைக் காணலாம்.

போதிய வருவாய் இவையென்றும், கோயில் திருமதில் களில் எழுத்துவடிவிலே பொறித்து வைக்கும் வழக்கம், தஞ்சை சோழவமிசத் திலகரான முதலாவது இராஜராஜ சோழனதாகும். இது, இவன் வழிவந்தோராலும் மற்றை யோராலும் கையாளப்பட்டு வந்தமை நம் நாட்டின் தவப் பயனே. ஆகவே ஆலயங்களைப் புதுப்பிக்கும் செல்வர்கள் ஆங்காங்கு காணப்படும் கல்வெட்டுக்களை முறைப்படியே எண்ணிக்கையிட்டுத் தனியே எடுத்துவைத்து, பின்னர் திருப்பணியில் அவைகளை வரிசைப்பட ஒழுங்காக வைத்துக் கட்டுவதே சாலச் சிறப்புடையதாகும். மற்றொரு முறை யுமுண்டு. அக்கல் வெட்டுக்களிலுள்ள வாசகங்களை எழுதி வைத்து, கற்சுவர் எழுப்பிய பின்பு அவைகளை மறுமுறை யும் அங்கு பொறித்துவைத்தலுமாகும். இல்லையேல் சிறி தளவேயாயினும் நிலைத்துள்ள நமது புராதன சரித்திரக் குறிப்புக்கள் அழிந்தொழிவதாகும். திருப்பணியாளர் களும் தாம் பழங்கோயில்களைப் புதுப்பிக்கும் முறையில் நன்மை செய்வதேபோல் நம் நாட்டிற்கே பெருந்தீங்கிழைத் தவர்களாகவும் ஆவர். இதனைத் திருப்பணிச் செல்வர்கள் கவனிப்பார்களாக.

**சரவணப் பொய்கை.**

திருவாவினன்குடிக்கோயிலின் வடகிழக்கில் சரவணப் பொய்கை அமைந்துள்ளது. முன்பு இது ஒரு கவலைக் கிணறாக இருந்தது. அதனைச் சட்டிச்சாமியார் என்ற பெரியார் யாசகம் செய்து புதுக்கினர். இப்போது இது ஒரு அழகிய தடாகம். சுற்றிலும் கைப்பிடிச் சுவரெடுத் துப் படிவரிசையும் கட்டப்பட்டுள்ளது. பழநி முருகனைத் தரிசனம் செய்வோர், இப்பொய்கையிலும் நீராடிச்

செல்வர். காவடியெடுப்போரும் இத்தலத்தினின்றுமே தம் பிரார்த்தனைகளைக் கொண்டுசெல்வர். இத்தல விருக்ஷம் நெல்லியாகும்.

கோயில் முன்னணியில்தான் பங்குனி உத்திரப் பெருவிழா மிகச் சிறப்புடன் 10 நாட்கள் நடைபெறுவது. அதன் 6-ஆம் நாள் விழாவில் வெள்ளித் தேர்மீது முத்துக் குமரன் பவனிவருதலைக் காண்போர் கண்பெற்ற பயனை எய்தினவராவர். ஆவினன்குடிப் பெருமானுக்கு நாள் தோறும் ஆறு காலம் பூசனையும், மாதக்கார்த்திகைத் திருவுலாவுடன் மற்ற சிறப்புக்களும் நடைபெறுவன.

பழநித்தல தரிசன முறையைக் கூறுவதான செய்யுளொன்று பாராட்டற்குரியதாகும். அது பின்வருமாறு:-

"தருமிரவி யுதயமது கண்டுவை காபுரி
  தனைக்கண்டு சுத்தி கண்டு
சண்முகப் புனல்கண்டு நியமாதி கண்டுபின்
  சரவணப் பொய்கை யாடி
அருள்பெருகு மாவிநன் குடிகண்டு கைலாசர்
  அம்மைபெரி யம்மை யைக் கண்(டு)
அம்பொன்மலை கண்டதி லிடும்பர்சந் நிதிகண்டங்(கு)
  அநேக கண் காட்சி கண்டு
கருணைகண் டருள்வள்ளி தெய்வயானை யைக்கண்டு
  களிகண் டிருக்கு முன் றன்
கமலபா தங்கண்ட பேரொருக். காலுமக்
  காலனைக் கண்டிடு வரோ?
பரிதிவலி கண்டவன் றனைவென்ற தம்பிதன்
  பராக்ரமங் கண்டது ரையே
பழமறைசொ லியசீல தொழுமவர்க ளநுகூல
  பழநிமலை வடிவேல னே."

— வடிவேலர் சந்நிதி முறை.

**பழநி—ஊர்க்கோயிலாகிய பெரியநாயகியம்மன் கோயில்.**

பழநி நகரின் மேற்குப்பக்கத்திலே பெருமிதமாக விளங்குவது பிருஹந்நாயகி என்ற பெரியநாயகியம்மையாரது திருக்கோயிலாகும். இக்கோயில், உண்மை, அறிவு, இன்பம் வடிவினராகிய சோமாஸ்கந்த மூர்த்தத்தின் அருள் தத்துவத்தை விளக்குகின்றது. சந்நிதி அமைப்பு முறையில், முதலில் பெரிய நாயகியம்மையாரதும் நடுவில் வள்ளி தெய்வானையுடன் முருகப்பெருமானும், அதனை அடுத்து கைலாசநாதப்பெருமான் சந்நிதிகளாகவும் அமைந்துள்ளன. இவைகளுக்கு தென் பாகத்தே - அழகிய ஒரு பெரு மண்டபத்தில் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி சந்நிதி உள்ளது.* வடபாகத்தே - தெற்கு நோக்கிய நடராஜர் திருத்தளியும் சமீப காலத்தே செட்டி நாட்டு தனவணிகர்களால் எடுப்பிக்கப்பட்டு, 1907-ம் ஆண்டில் பிரதிட்டிக்கப்பட்டது. பெரியநாயகியம்மன் திருக்கோயில் 16-ம் நூற்றுண்டிலே, மதுரை நாயக்க மன்னர் காலத்ததாகும்.§ கல்வெட்டுக்கள் யாதும் காணப்படவில்லை. நாயக்கர்களால் எடுப்பிக்கப் பெற்று, பழநி, ஆயக்குடி, நெய்க்காரப்பட்டி நாயக்கர்கள் குடும்பத்தினரால் விரிவாக திருப்பணி செய்விக்கப்பெற்ற தாகும். திருச்சந்நிதிகளின் எதிரேயுள்ள மண்டபத்தூண்களில் இக் கோயிலைச் சீர்திருத்தி பெருக்கிய பல பெரியார்களது உருவச்சிலைகளைக் காணலாம்.

---

*"பழையபார்வதிகொற்றி **பெரியநாயகி** பெற்ற பழநிமாமலையுற்ற பெருமாளே" என அருணகிரிநாதர் கூறுதலை நோக்குக.

§இக்கோயில் படிவரிசையில் "1907-வரு நவம்பர்-மீ 25-உ (பிலவங்க - கார்த்திகை - 10-2) ஸ்ரீ முத்துக்குமாரசாமி சந்நிதியில் மதுரை மேலப்பேட்டை கீழப்பேட்டை க்ஷத்திரிய நாடார்களானவோர்கள் திருப்புணி, தளவரிசை, படி, யானை வகையரா உபயம்" என்ற கல்வெட்டு காணப்படுகிறது.



பழநி ஊர்க்கோயில் பெரியநாயகியம்மன் முன்மண்டபம்.



முருகன் வெள்ளி ரத பவனி வருதல்.

இத்திருக்கோயில் கிழக்கு நோக்கியது. திருவாயிற் பெருங்கோபுரம், தென்னிந்தியாவிற் பல இடங்களில் அரைகுறையாக விடப்பட்ட இராயர் கோபுரம்போல இங்கும் மேல் மாடங்களின்றியும் பாதியாக விடப்பட்டுள் ளது. இக்கோபுரம் விஜயநகரத்தரசர்களுள் ஒருவராலே தொடங்கி, எக்காரணத்தாலோ நடுவில் நிறுத்தப்பட்டிருத் தல்வேண்டும். இவ்வாயிலுக்கு முன்புள்ள நவரங்க மண் டபம் சிவகாசிக் கலகத்திற்குப் பின்னர், நாடார் குல மக்களால் அமைக்கப்பட்டதெனக் கூறுவர். ஆண்டு தோறும் இக்குல மக்கள் இங்கு குழுமி ஒரு பெருவிழா செய்கின்றனர். மண்டபத்தின் இருமருங்கிலும் நிற்கும் தூண்களிலே அழகிய சிவத்திருமேனிகளும், திருப்பணி செய்தார்களது உருவங்களும் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றுள்ளே சிவபிரான் ஆடிய ஊர்த்துவத் தாண்டவக் கோலமும், அக்கூத்தினைக் காளியம்மை கண்டு அகந்தை ஒழிந்த நடனத் தோற்றமும் எதிரெதிரே அமைக்கப்பட் டுள்ளவை மிகவும் போற்றுதற்குரியதாகும்.

இக்கோயில் கும்பாபிஷேகம் பழநி மக்களின் நினைவுக் கெட்டாத காலத்தில் நிகழ்ந்ததன் பின்னர் - அடுத்தமுறை யாக, 1940-ம் ஆண்டு பழநி மலை ராயகோபுர கும்பாபி ஷேகத்தையொட்டி, 1940 செப்டம்பர் மாதம் 5-ம் நாள் சிறப்புடன் நிகழ்ந்தது. இத்தலவிருக்ஷம் வில்வமாகும்.

**பழநித் தலபுராணமும்—பிரபந்தங்களும்.**

பழநித் தலவரலாற்றை நிறைவுபெற எடுத்துரைப்பது பழநித்தலபுராணம் ஒன்றேயாம். இத்தலபுராணம் பழநித் தலவாசியாகிய துளுவ வேளாளர் குலத்துதித்த பெரிய வான் கவிராயர் அருந்தவப் புதல்வர் பாலசுப்பிரமணிய

கவிராயரால் இயற்றப் பெற்றது. இப்புராணம் 23 சருக்கங்களும் 987 செய்யுட்களையும் கொண்டது. கி. பி. 1628-ஆம் ஆண்டில் இயற்றப்பெற்றது. இதன் முதற்பதிப்பு 1893-ம் ஆண்டிலும், இரண்டாம் பதிப்பு 1903-ம் ஆண்டில் நா. கதிரைவேற் பிள்ளையவர்களாலும் பதிப்பிக்கப்பெற்று, நூலாசிரியர் வரலாற்றுடனும் பல அரிய நூல்களின் மேற்கோள்களுடனும் எழுதப் பெற்ற பொழிப்புரையுடனும் கூடியது.

திருமுருகாற்றுப்படையும், கந்தபுராணமுமே யன்றிப் பதினைந்தாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் முருகக்கடவுளின் திருவருட் பேறுபெற்ற அருணகிரியார், பழநிப்பிரானைப் பாடிய திருப்புகழ்ப் பாக்கள் தொண்ணூற்றுரும் உள்ளன. இவையன்றி பழநி மாம்பழக் கவிச்சிங்க நாவலராலும், புலவர் புராணம் பாடிய முருகதாச சுவாமிகளென்ற ஸ்ரீமத் தண்டபாணிசுவாமிகளாலும், பிற்காலத்தே அவ்வப்போது தோன்றிய மெய்யன்பர்களாலும், புலவர்களாலும், சிற்றரசர்களாலும் பாடப்பட்ட பிரபந்தங்கள் எண்ணில்லாதனவாம்.

**திருவிழாக்களும் — நிகழும் காலங்களும்.**

திருமலைமீது வீற்றிருக்கும் பழநியாண்டவருக்கு உற்சவ மூர்த்தியாவர் சின்னக்குமரர். திருவிழாக் காலங்களாகிய சிறப்பு நாட்கள் ஒவ்வோர் ஆண்டிலும் வைகாசி விசாகத்திலும், ஐப்பசி சஷ்டியிலும்; (கார்த்திகை) கிருத்திகையிலும்; தைப்பூசத்திலும்; பங்குனி உத்திரத்திலும் நடைபெறுகின்றன. இவையன்றி மாதந்தோறும்

திருக் கார்த்திகை, விசாகம், சஷ்டி, மாதப்பிறப்பு, அமாவாசை ஆகிய நாட்களிலும் விசேஷ விழாக்களிலும் மலைமீது சின்னக் குமரர் பவனிவந்து விழாக்கொள்கின்றனர்.

திருவாவினன்குடி குழந்தை வேலாயுதருக்கு உற்சவமூர்த்தியாக இருப்பவர் நகரத்திருக்கோயிலிலே கொலுவீற்றிருந்தருளும் முத்துக்குமாரசாமியாகும். ஆண்டுச் சிறப்புக்களாகிய வைகாசி விசாகம், தைப்பூசம், பங்குனி உத்திரம் ஆகிய பெரு விழாக்களில் இத்திருமேனியே திருத்தேரிலும், வெள்ளித்தேரிலும் உலாப்போந்து சிறப்பிக்கிறார்.

பழநி தேவஸ்தானத்திற்கு நகரத் திருக்கோயில் முன்பு ஒரு மரத்தேரும், அடிவாரத்திலே ஒரு மரத்தேருமன்றிப் புதிதாக எழுபத்தாறுயிரம் ரூபா செலவிலே செய்துள்ள அழகிய சித்திர வேலைப்பாடமைந்த வெள்ளித்தேருமாக மூன்று தேர்கள் இருக்கின்றன. தைப்பூசம், பங்குனி உத்திரம் பெரு விழாக்களில் மரத்தேர் ஊர்வலம் அன்றி, வெள்ளித்தேரிலும் இறைவன் நகர்வலமாக தைப்பூசத்தன்றும், ஆடி லக்ஷார்ச்சனைப் பூர்த்தியன்றும்; பங்குனி உத்திரத்திலும் மலையைச்சுற்றி வந்து காட்சிதந்தருளுவர். வைகாசி, விசாக விழா, தைப்பூச விழாக்கள் ஊர்க்கோயிலிலும், பங்குனித் திருவிழா திருவாவினன்குடிக் கோயில் முன்பாகவும் பத்து நாட்கள் மிகச் சிறப்பாக நடைபெறும். பெருந்திரளான பக்தர்கள் வந்து வணங்கிப் பெரும்பேறு பெறுவர்.

**ஐப்பசிக் கந்தர் சஷ்டி விழா**

மிகச் சிறப்பாக ஆறு நாட்கள் நடைபெறும். இதன் தனிச் சிறப்பாக ஆண்டில் ஒரேமுறைதான் மலைமீதுள்ள சின்னக்குமரர், சூரபதுமாசுர வதம் பற்றி மலையினின்றும் இறங்கி அசுரர்களை வதம் செய்து திருமலை வலம்வந்து அதன்பின்னர் மலையின்மீது எழுந்தருளுவர். பழநிமலையின் நாற்புறத்திலும் ஒவ்வொரு முறையாக தாரகன், சிங்க முகன், சூரபதுமரை வதஞ்செய்து வெற்றியுடன் திரும்பு வது காணத்தக்க கண்கொள்ளாக் காட்சியாகும்.

**திருக்கார்த்திகை விழா**

ஆண்டுதோறும் கார்த்திகை மாதத்தில் பத்துநாட்கள் வெகு சிறப்பாக நடைபெறும். முதல் நாள் விழா கோவை சேக்கிழார் திருக்கூட்டத்தார் நடத்திவைப்பார்கள். தின மும் சின்னகுமாரர் வெள்ளி விமானத்திலும், கார்த்திகை யன்று தங்கமயில் வாகனத்தின்மீதும் மலையின் உள் வெளிபிரகாரங்களில் விழாக்கொள்ளுவார். விழாவின் ஒவ்வொரு தினமும், மலையின் மண்டபங்களில் பல அறிய சமய சொற்பொழிவுகளும் பல அறிஞர்களால் நடை பெறும்.

**அக்கினி நக்ஷத்திர விழா**

பழநிப் பெருமானை அன்போடு வலம் வரும் மெய்யன் பர்கள் எல்லாப் பேறுகளையும் அடைவர். அன்பர்கள் பலர் கிரிவலம் வராத நாள் இல்லையாயினும், சிறப்பாக வேனிற்காலமாகிய சித்திரைத் திங்களின் பிற்பகுதியும் வைகாசித் திங்களின் முற்பகுதியுங் கூடிய அக்கினி நட்சத் திரமாகிய பதினைந்து நாட்களிலும் இரவு பகலில்லாது



பக்தர்கள் மலையேறும் காட்சி.





மலைக்கோயில் உட்பிரகாரக் காட்சி.

பல்லாயிரக் கணக்கான அடியார்கள் திரள் திரளாக ஆர்வத்தோடு கிரிவலம் வருவர். அக்காட்சியினைக் கண்டோரே அறிவர். அக்காலத்தேதான் நறுமணங்கமழும் கடப்ப மரங்களும், இனிய கனி மரங்களும் தத்தம் பழய இலைகளை உதிர்த்து அழகிய கொழுந்துகளையும் தளிர்களையும், போதுகளையும், பச்சிலைகளையும், அரும்புகளையும், மலர்களையும் பயனுகத் தந்து நிற்பன.

இவ்விள வேனிற்காலத்து நறுமலர்ச் சோலையாகிய இதனகத்துப் புகுந்துவரும் தென்றல் நம் முருகப்பெருமானுகிய மணங்கமழ் தெய்வத்து இளநலத்தினை மன்னுயிர்கட்குணர்த்தி மக்களாகிய நம்மையெல்லாம் அவன் திருவடிகளில் திளைக்கவைக்கும் பெற்றிவாய்ந்தது. அக்கினி நட்சத்திர கடைசி நாளன்று ஊர்க்கோயில் ஸ்ரீ முத்துக்குமாரசாமி அடிவாரத்துக்கு பவனி வந்து, இரவு கிரிப்பிரகாரம் திருவுலாப்போந்து திரும்பும் விழா இங்கு வெகு சிறப்பாகக் கொண்டாடப்பெற்றுவருகிறது.

**பெரியாவுடையார் கோயில்.**

கண்ணுக்கினிமையும், அழகும், தெய்வீகமும் நிரம்பிய இடங்கள் பல பழநியைச்சூழ உள்ளன. அவற்றுள் ஒன்று பேரியாவுடையார் கோயில் ஆகும். இது பழநிக்கு வடக்காக பழைய தாராபுரம் வழியில் மூன்று கல் தொலையிலும், திண்டுக்கல்லிலிருந்து பொள்ளாச்சி செல்லும் இருப்புப் பாதையில் சண்முகநதி ரயில்பாலத்திற்கு அடுத்தும் இருப்பதாகும். இக்கோயில் சண்முகநதியின் கிழக்குக் கரையில் அமைந்துள்ளது. இத்தெய்வீகமான ஆறு கொடைக்கானல் மலைத்தொடரின் அழகிய பூம்புரை முதலிய பள்ளத்தாக்குகளில் வீழ்ந்துவரும் அருவிகள் சேர்ந்து பாய்வது.

பழநி—உடுமலைப்பேட்டை பெருவழியில் வருவதான இந் நதியின் தென்பாகத்திலுள்ள ஒரு பகுதியிற்றான் பழநிக்கு வரும் பக்த கோடிகள் திரளாக வந்து நீராடி இறைவனுக் குக் காவடி எடுத்துச் செல்வது. இந்த நீராடும் துறை பழநியிலிருந்து சுமார் இரண்டு கல் தொலையாகும்.

பேரியாவுடையார் கோயில் அமைந்துள்ள இடமானது கன்னிகாரவனம் எனத் தலபுராணத்திலே கூறப்பெறுகின் றது. இக்கோயில் சேரர்களாலும், பாண்டியன், கொங்கு சோழ அரசர்களாலும் சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன் னர் கட்டப்பட்டிருத்தல் வேண்டும். ஈசுவரன்: சுயம்பு லிங்கம்; மேற்குப் பார்த்த திருக்கோலம் சாலச் சிறப் புடையதாகும். சுவாமியின் பெயர் பிரகதீசுவரர் என்ற பேரியாவுடையார். இப்பெயருடைய சிவ சந்நிதிகள் அநே கம் சோழநாட்டில் சோழ அரசர்களால் எடுத்தனவாகக் காணலாம். இக்கோயிலின் திருமதில்களில் பொறிக்கப் பட்டிருந்த 16 கல்வெட்டுக்கள்* திருப்பணி தொடங்கு முன்பே அரசினர் கல்வெட்டாராய்ச்சிக் கழகத்தாரால் படியெடுக்கப்பெற்றுள்ளன. அவைகளிற் கண்ட குறிப் புக்களால் தெரிவதாவன:

கேரளவமிச மன்னர்களின் பெயர்கள்:

வீரகேரள, வீரநாரணர், அமரபுஜங்கவர்மன், அதிராஜ ராஜதேவன், வீரகேரளவர்மன்;

சோழர்கள்: பரகேசரிவர்மன், வீரநாரண அதிசய சோழதேவர்;

பாண்டியன்: திரிபுவன சக்கரவர்த்தின், கோனேரின்மைகொண்டான். இவர்களால் இங்கு திருப்பணி இயற்றப் பெற்றதென்றும், இரவிமங்கலம், கோதைமங்கலம், வெசலிப்பாடி, வைகாவிநாடு, வைகாவூர்நாடு, இருவிரல், பரமேசுவரம் உடைய நாயனர் கோயில் முதலியனவும் காண்பதாகின்றன. இன்னும் Ins. 721 of 1905 சாசனத்தால் இங்கு விக்கிரமபாண்டியன் கங்கநாராயண சக்கிரவர்த்தியால் அம்மன் கோயில் பிரதிட்டிக்கப்பெற்றதென்றும் தெரியவருகிறது.

ஆனல், இப்போது அவைகளுள் ஒரு கல்வெட்டேனும் பார்க்க முடியா நிலையில் அக்கற்களை அடியோடு நீக்கியும், உளியால் யாவும் செதுக்கியும், புதுக் கற்களாகத் திருப்பணி நிறைவேற்றப்பட்டுள்ளது. இக்கோயில் பல நூற்றுண்டுகளுக்கிடையே மிக்க சீர்கேடுற்றிருந்தமையாலே ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னர் அன்பர்களது கொடையினல் திரட்டிய பொருளால் ஆலயம் முழுதும் பிரித்துக் கட்டித் திருப்பணி* செய்யப்பட்டு 1915-ஆம் ஆண்டிலே கும்பாபிஷேகம் நடந்தேறியது.

இங்கு சிவபிரானகிய பெரியாவுடையாருக்குமட்டுமே சந்நிதி உள்ளது. பிருஹந்நாயகி என்ற பெரியநாயகியம்மையாருக்கு முன்பு சந்நிதி இருந்ததென்றும், சுமார் 90

---

* Epi: Rep: 1905. Ins. 706—21.

*இத்திருப்பணியும் கும்பாபிஷேகமும் முன்னின்று முற்றுப் பெறச்செய்த அன்பர்கள், திருவாளர்கள்: பழநி, ப. கிருஷ்ண சாமி பண்டாரம், சு. பாலராமலிங்கஞ் செட்டியார், ம. நல்ல சாமித் தேவர், கருப்பணத் தேவர் முதலியோராவர்.

ஆண்டுகட்கு முன்னர் சிதைவுற்றிருந்த அச்சந்நிதியை அவ்விடமிருந்து நீக்கி, ஊர்க்கோயிலில் கொணர்ந்து கட்டுவித்தார்களென்றும் கூறுவர். மற்றொரு காரணமும் கூறுவர். பெரியநாயகி நகரத்திருக்கோயிலாகிய வில்வாரண்யத்திலே சென்று தவஞ்செய்யும்பொருட்டுச் சேர்ந்தமையே என்பர். அங்குச்சென்று தவம் புரிந்த அம்மையாருக்குக் காட்சி கொடுத்து மணம்புரிய வந்தகோலமே பழநி ஊர்க்கோயிலிலுள்ள கைலாசநாதராகிய சிவபெருமான் வடிவம். பெரியாவுடையார் கோயிலில் அம்மையாருக்கு இப்போது சந்நிதி இல்லையாயினும், திருமால், பிரமன் முதலிய எல்லா பரிவார தேவர்களுக்கும் தனிச்சுற்றாலயங்கள் உண்டு. திருப்பணிக் காலத்தில் நவக்கிரக பிரதிட்டையும் செய்யப்பெற்றுள்ளது. இங்குள்ள தட்சணாமூர்த்தி, சந்திரசேகரர், திருமால், சண்டேசுவரர், கணபதி திருவுருவங்கள் மிக்க அழகும், சிற்பத்திறனும் உடையன. பெரியாவுடையார் திருச்சந்நிதியை அடுத்து மகாமண்டபத்தில் நடராஜப்பெருமான் வடக்கு நோக்கிய மூலத்தானப் பெருமானாக விளங்குகின்றார். இப்புராதனக் கோயில் பூஞ்சோலைகளும், வயலும் சூழ்ந்த சண்முகநதிக் கரையில் அமைந்துள்ள தூயதான இயற்கை வளம் நிரம்பியதாயிருத்தல் வழிபட வரும் மெய்யன்பர்களின் உள்ளத்தைக் கவர்கின்றது. இக்கோயிற் சந்நிதியில் கணக்கற்ற மணவினைகள் நடைபெறுகின்றன. தம்பதிகள் சூழவரும் மக்கள், உண்டி சமைத்து உண்ணுவதற்கும், தங்கவும் வசதிகள் செய்யப்பெற்றுள்ளன. 3—9—1941-ல் விநாயகர் ஆலயமொன்று முன்மண்டபத்துடன் இக்கோயிலின் வெளிப்பாகத்தில், பழநி திரு. நா. மாரிமுத்து வேளார் அவர்களால் கட்டப்பெற்றுள்ளது.




திருப்புகழ் முதல் மகாநாடு 1943 — தலைவர், சொற்பொழிவாளர்கள், நிருவாகிகள், அன்பர்கள்.

**பிறகோயில்களும் விவரங்களும்.**

பழநியம்பதியில் ஆங்காங்கு உள்ளவை, விநாயகர் கோயில்கள் ஐந்தும், மாரியம்மன் கோயிலும், அங்காளம்மன் கோயிலும், படிப்பாறை காளியம்மன் கோயிலும், இப்பழநியில் ஆட்சிபுரிந்த குறுநில மன்னர்களால் எடுப்பு வித்த *பட்டத்து விநாயகர் கோயிலும், பிறவுமாகும். திருமாலுக்கு ஊர்க்கடைவீதியில் வேணுகோபாலப்பெருமாள் கோயிலும், மேற்கு ரதவீதியில் இலக்குமி நாராயணப்பெருமாள் கோயிலுமாக இரண்டு உள்ளன.

இன்னும் திருவாவினன்குடிக் கோயிலை அடுத்து அங்கிலி பரமேசுவரருக்கு ஒரு கோயிலும், இதற்குச் சற்றுத் தென்பால் அடிவாரம் கடைவீதி வரிசையில் கிழக்குநோக்கி §வேளீஸ்வர சுவாமிக்கு மற்றொரு கோயிலுமுள்ளது.

---

*பழநியில் ஆட்சி செலுத்திய ஜமீன்தார் ஒருவருக்கு ஆண் சந்ததி இல்லாதுபோக இவ் விநாயகரின் அருளால் உதித்த இளவரசரின் ஞாபகார்த்தமாக இவ் விநாயகர் "பட்டத்து விநாயகர்" என்ற பெயர் பெற்றார் என்பது.

சிதைவுற்றிருந்த பட்டத்து விநாயகர் கோயில் திருப்பணியும் கும்பாபிஷேகமும் முற்றுவித்த அன்பர்கள்; திருவாளர்கள், பழநி, ப. கிருஷ்ணசாமி பண்டாரம், சு. பாலராமலிங்கஞ் செட்டியார், அ. முத்தையா பிள்ளை முதலியோர் ஆவர்.

§தொன்றுதொட்டு சேர சோழ பாண்டியருக்கு மணப்பெண் கொடுக்கும் உரிமையுடையவராகிய வேளிர் என்ற வேளாளர் மரபினராலே கட்டப்பட்டதனால் வேளீசுவரர் என்ற பெயர் அச்சிவபிரானுக்கு ஆயிற்றென்னலாம்; சோழரால் எடுக்கப்பட்ட கோயில் சோழீச்சரம் என்பதுபோல.

இவையன்றி பழநிக்கு இரண்டு கல் தொலேயிலேயுள தாகிய பாலசமுத்திரம் என்னும் சிற்றூரிலுள்ள அகோபில வரதராஜப் பெருமாள் கோயில் ஒன்றும் உள்ளது. இக் கோயில் 17-ஆம் நூற்ருண்டிலே நாயக்க வமிசத்தாரால் கட்டப்பட்டிருத்தல் வேண்டும். இக்கோயிலுக்கு ஆண்டு தோறும் அரசியலார் ரூபா 654—8—5 மோகினிப் படித் தரம் உதவுகின்றனர். சிதைவுற்றிருக்கின்ற இக்கோயில் சமீபத்திலே திருப்பணி செய்யப் பாலாலயப் பிரதிட்டை நடைந்துள்ளது.

### கலேவளர்ச்சி நிலயங்கள்.

**பழநி சைவசித்தாந்த சபை :**

இச்சபை சைவத்தின் சிறப்பையும், தமிழின் பெரு மையையும், தக்க சொற்பொழிவுகளின் வாயிலாகவும், துண்டுத் தாள்கள், சிறு நூல்கள் வாயிலாகவும் பரப்பும் நன்னேக்கத்தோடு 1940-ஆம் ஆண்டு செப்டம்பர்த்திங்கள் 7-ஆம் நாள் தொடங்கப்பெற்று தேவஸ்தான ஆட்சியின ரின் துணேகொண்டும், பழநிப் பொது மக்களின் பொறுப் பிலும் நடைபெற்று வருகிறது.

இதன் முதல் ஆண்டு நிறைவு விழா 23—1—1942 தொடங்கி மூன்று நாட்களாக திருக்கோவலூராதீனம், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடம், ஸ்ரீலஸ்ரீ சிவசண் முக மெய்ஞான சிவாச்சாரிய அடிகளார் தலேமையில் சிறப் பாக நடைபெற்றது. இதனே அடுத்த விழாக்கள் ஆண்டு தோறும் பழநி திருப்புகழ் மகாநாட்டின் ஆறு நாட் பெருஞ் சிறப்புக்களுடன்கூட, இதற்கென தனிப்பட்ட ஒரு நாள் விழாவாகவும் நடைபெற்றுவருகிறது. இம்மகாநாடு

முருகனின் தனியருள் பெற்றும், கந்தலோகமெனவும் திகழ்ந்து வருகின்றது. பழநி சைவசித்தாந்த சபையின் தலைமை ஸ்ரீலஸ்ரீ சாது சுவாமிகளும் அமைச்சர் - தேவஸ்தான நிருவாக பொறுப்பாளர் திரு. K. சிதம்பரம் பிள்ளை அவர்களும், பொருளாளர் புரவலர் வா. வே. கா. ரா. முருகேச முதலியாரவர்களாலும் மற்றும் நிருவாக உருப்பினர்களும் தாங்கி நடத்துகின்றனர்.

**திருப்புகழ் மகாநாடு :**

பழநி சைவசித்தாந்த சபைப் பணியின் தொடர்ச்சியாக, 1943-ம் ஆண்டுமுதல் அக்நி நட்சத்திர முன்பின் ஆறுநாட்களில் ஆண்டவரைத் தரிசிக்க வரும் ஆயிரக் கணக்கான அன்பர்களைக்கருதி - திருப்புகழ் மகாநாடொன்று "கணபதிஇராமலிங்க நிலையத்தில் சைவத்திரு. C. R. முருகேச முதலியார் அவர்களது பெருந்துணை கொண்டு நடந்துவருகிறது. கோவை மகாநாட்டு பெரும் புலவர்கள் யாவரும் இதில் கலந்துகொள்கின்றனர். மகாநாட்டை முதல் ஆண்டு தொடங்கி, முறையே தலைமை தாங்கி நடத்திக்கொடுத்தவர்கள் - திருப்புகழ் மணி T. M. கிருஷ்ணசாமி ஐயரவர்கள், ஸ்ரீமத் வள்ளிமலை சுவாமிகள், யாழ்ப்பாணம், சு. நடேச பிள்ளையவர்கள், தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள், திருப்புகழ்மணி, ராஜ்யசேவப்பிரவீண கிருஷ்ணசாமி ஐயரவர்களாவர்.

மகாநாட்டின் முதல் மூன்று நாட்கள் திருப்புகழின் திறனை ஆராயவும், நான்காம் நாள் பழநி சைவசித்தாந்த சபையின் ஆண்டு விழாவாகவும், ஐந்தாம் நாள் திருமுறை விழாவாகவும், ஆறும் நாள் தமிழ்த் திருநாளாகவும்

கொண்டாடப்பெற்று வருகிறது. இதில் சென்னை மாகாணம் திருவனந்தபுரம் இலங்கை அறிஞர் பலர் கலந்துகொள்கின்றனர். ஏராளமாக வருகின்ற அன்பர்களுக்கு தங்கவும், உணவு வசதிகளும் செய்துதரப் பெறுகின்றது.

**வேத சிவாகம பாடசாலை :**

இப்பழநித் திருமலைக் கோயிலில் வழிபாடு செய்பவராகிய ஆதி சைவர்களும், அணுக்கர்களாக இருந்துவரும் பண்டாரங்களுக்கும், பொதுவாக விரும்பிக்கற்கும் ஏனைய பிள்ளைகளுக்கும் நற்கல்வியும், சமயநூற்பயிற்சியும், சைவ சமய உணர்ச்சியும் உண்டாக்கக் கருதி முன்னரேயுள்ள வேதபாடசாலையுடன், சிவகாம பாடசாலை ஒன்று அதனோடு இணைத்து *வேத சிவகாம பாடசாலை என 23—1—1941-ல் சென்னை, இந்துமத அறநிலயப் பாதுகாப்புக் கழகத் தலைவர் உயர்திரு. திவான் பகதூர் தி. மூ. நாராயணசாமி பிள்ளை, எம். ஏ., பி. எல்., அவர்களாலே தொடங்கி வைக்கப்பட்டுள்ளது.

---

*தமிழிலும், வடமொழியிலும் எழுதப் படிக்கவும், இலக்கண இலக்கிய பாடங்களும், தேவார திருவாசகம் முதலிய சைவத் திருமுறை பன்னிரண்டோடு திருப்புகழ் பாராயணங் கற்பித்தலும், சைவாகமங்களையும், நான்மறைகளையும், கற்பித்தலும் அவற்றின் தெளிவு நூல்களாகிய சைவ சித்தாந்த பாடங்களைக் கற்பித்தலும், இன்னும் இவை சார்பான அறிவு விளக்கம், கலையாக்கம், ஒழுக்க நிலை முதலியன வளர்த்தலும் கருதி இப் பாடசாலை நிறுவப்பட்டிருக்கிறது.

**ஆண்டவன் நூல் நிலயம் :**

இவையன்றித் தமிழுணர்ச்சியும், சைவசமய உண்மை களும் பரப்பும் நோக்கத்தோடு, பழநி மலையடிவாரத்திலே பங்குனித்தேர் மண்டபத்தில், சென்ற 1938-ஆம் ஆண்டில் சென்னை, இந்துமத அறநிலயப் பாதுகாப்புக் கழகத்தலைவரா யிருந்த உயர்திரு. A. கோண்டப்பா, B. A., B. L., அவர்க ளால் " ஆண்டவன் நூல் நிலயம் " ஒன்று தொடங்கி நடந்து வருகின்றது. இந்நிலையத்திலே சங்க நூல்களும், சமயம், ஆராய்ச்சி, சரித்திரம், விஞ்ஞான ஆராய்ச்சி நூல்களும், வடமொழி, தெலுங்கு, கன்னடம், ஆங்கில நூல்களுமாக ஏறக்குறைய 1900 புஸ்தகங்கள் தொகுத்து வைக்கப்பட் டிருக்கின்றன. இத்துடன் சமயம், இலக்கியம், அரசியல் சம்பந்தமான வார, மாதாந்திர வெளியீடுகளும், தினசரிப் புதினத்தாள்களும் வரவழைத்து இலவச வாசகசாலையும் இணைத்துள்ளது.

பழநி மக்களுக்கும், தரிசனத்திற்காக வந்து செல்லு கின்ற எண்ணற்ற அயலூர் மக்களிற் பலருக்கும், கல்வி யும் சமய உணர்ச்சியும், தெளிவும் ஏற்படுவதற்கு இந் நிலயம் ஒரு நிலைக்களமாக விளங்குகின்றது.

**சமயச் சொற்பொழிவுகள் :**

மற்றும், சென்னை இந்துமத அறநிலயப் பாதுகாப்புக் கழகத்தாரின் ஆணைப்படியும், பழநி சைவ சித்தாந்த சபை யின் சார்பாகவும் வாரம் இருமுறை, மலைக்கோயிலில் திங்கட்கிழமைதோறும், ஊர்க்கோயிலில் வெள்ளிக்கிழமை தோறும் வேத சிவாகம பாடசாலையின் பேராசிரியர்

சிவத்திரு. சைவ சித்தாந்த சரபம், ஈசான சிவாசாரியர் அவர்களாலும், அவ்வப்போது பல அறிஞர்களாலும் சமயச் சொற்பொழிவுகளும் நிகழ்கின்றன.

இஃதன்றியும், விழாக்கள்தோறும் சமயச் சொற்பொழிவாளர்களால் அரிய விரிவுரைகளும், கலைவளர்ச்சிக்கான இசைவாணர்களால் இசையரங்குகளும் நடத்தப்படுகின்றன.

**புதிய நூல்கள் :**

1944-ல் உடுமலை, பழநி ஆண்டவர் மில்ஸ் மானேஜிங் ஏஜண்டு ராவ்பகதூர் R. குருசாமி நாயுடு அவர்களின் பொருளுதவியால் வையாபுரிப் பள்ளு என்ற பழமையான நூல் முதன்முதலாகவும்; கோவை, திரு. T. S. சிவசுப்பிரமணியம் செட்டியார், B. A., அவர்களின் பொருளுதவியால் பழநிப் பிள்ளைத் தமிழ் என்ற நூல் இரண்டாவது பதிப்பாகவும் அச்சு வாகனமேற்றி, அன்பர்களுக்கு உதவப் பெற்றன.

**கோயில்களின் ஆட்சிமுறை.**

பழநி தேவஸ்தானத்தைச் சேர்ந்த சுற்றுக்கோயில்கள் 26 ஆகும். இவை 1846-ஆம் ஆண்டுவரை சென்னை மாகாண அரசியலாரின் ஆளுகையிலிருந்துவந்ததும், அவ்வாண்டில் ஆயக்குடி ஜமீன்தார் அவர்களிடம் ஒப்புவிக்கப்பட்டது. அதன் பின்னர் பழநி ஜமீன்தார் அவர்களின் காரியஸ்தரிடமும், *Act 20/1863* சட்டத்தின்கீழ் நிறுவிய தேவஸ்தானக் கமிட்டியாரிடமும், பின்னர் *Madras Act 2/1927* அமுலுக்கு வரவே, சென்னை இந்துமத அறநிலையப்

பாதுகாப்புக் கழகத்தார்களின் — *The Madras Hindu Religious Endowments Board* — ஆட்சியிலும், 1939-முதல் *B. O. No. 1262 dated 6—3—1939* உத்தரவுப்படி ஒரு நிருவாக அதிகாரியின்—*Executive Officer* பொறுப்பிலும் இருந்துவருகிறது. இதன்றி போர்டார் அவர்களின் *B. O. No. 14719 dated 26—10—1943* உத்தரவுப்படி ஒரு ஆட்சி சூழ் மன்றத்தார்*—*Advisory Committee*—தேவஸ்தான நிர்வாகங்களைக் கவனித்தும் வருகின்றனர்.

**சார்புக் கோயில்கள்.**

தேவஸ்தானப் பொறுப்பில் அடங்கிய கோயில்களாவன :— திருமலையின்மீது: 1. ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி, 2. மலைக்கொழுந்து சிவன், அம்மன், 3. புவனேஸ்வரி அம்மை, போகசித்தர், 4. கயிலாசநாதர், அம்மன், 5. சப்தகன்னிகையரான மலைநாச்சிமார், 6. சண்டேசுவரர். மலைப்படிகளில்: 1. இடும்பன், 2. குராவடிவேலவர், 3. வையாபுரிதுரை, 4. பதினெட்டாம்படி கன்னிமார், 5. வள்ளியம்மன். அடிவாரத்தில்: 1. திருவாவினன்குடி

---

* ஆலோசனை சபை அங்கத்தினர்கள் :— திருவாளர்கள், 1. ராவ்பகதூர் ஐ. டி. ஓபளகொண்டம நாயக்கர் ஐயன் அவர்கள், ஜமீன்தார், ஆயக்குடி; 2. பி. எஸ். ஜி. ர. கோவிந்தராஜலு நாயுடு அவர்கள் பீளமேடு; 3. பாலகிருஷ்ணன் அவர்கள், எம். எல். ஏ., மிராஸ்தார், ஆயக்குடி; 4. வி. எஸ். வேணுவுடையா கவுண்டர் அவர்கள், பட்டக்காரர், சங்கரண்டாம்பாளையம்; 5. எம். பி. மங்கல கவுண்டர் அவர்கள், மிராஸ்தார், பழநி; 6. வ. வே. கா. ரு. முருகேச முதலியார் அவர்கள், ஏஜெண்டு, மதுரை ஹார்வி மில்ஸ், கணபதி இராமலிங்க நிலயம், பழநி; 7. சி. ஆர். சதாசிவ முதலியார் அவர்கள், மானேஜிங் ஏஜெண்டு, பங்கஜா மில்ஸ், கோயமுத்தூர்; 8. கே. பி. தியாகராஜ தீக்ஷதர் அவர்கள், எம். ஏ., பி. எல்., ராமபுரம் எஸ்டேட், கோயமுத்தூர்.

குழந்தை வேலாயுதசுவாமி, 2. வேளீசுவரர், 3. அங்கிலி பரமேசுவரர், 4. மீனாட்சி சுந்தரேசுவரர், 5. பாதவிநாயகர். பழநி ஊர்க்கோயில்கள்: 1. பெரியநாயகியம்மை என்ற பிரஹந்நாயகி, 2. கோசல விநாயகர், 3. உத்தர விநாயகர், 4. அபரஞ்சி விநாயகர், 5. லக்ஷ்மிநாராயணப் பெருமாள், 6. வேணுகோபாலப்பெருமாள். வையாபுரிக்குளம் பாதிரி விநாயகர். சண்முக நதிக்கரை: 1. பெரியாவுடையார் என்ற பிரகதீசுவரர், 2. தூர்நாச்சியம்மன், 3. நவக்கிரகங்கள், 4. விநாயகர். இடும்பன் மலை: கலிங்கன்பாறை சுப்பிரமணியசுவாமி. பாலசமுத்திரம்: அகோபில வரதராஜப் பெருமாள். கீரனூர்: வாகீசுவர சுவாமி.

மேற்கூறிய கோயில்கள் தவிர, தெற்கு மலைப்பிரகாரத்தின் மரங்களடர்ந்த காவின் கீழ்ப்பாகத்திலுள்ள அழகிய நாச்சியம்மன் கோயிலும் சிறந்தவை. முன்னது சமத்தூர் ஜமீந்தார் திருமிகு. B. K. வாணவராயரவர்கள், அவர்களும், அடுத்தது அருள்திரு. சாதுசுவாமிகள், திருமிகு. வா. வே. கா. ரு. முருகேச முதலியார் அவர்களது மான் கண்காணிப்பிலும் உள்ளன.

**தேவஸ்தான வருமானம்—செலவுகள்.**

பழநி தேவஸ்தானத்தின் 1352 பசலி வருமானமும் செலவும் பின்வருமாறு — வரவு ரூபா. 1,25,300—0—2. செலவு ரூபா. 1,02,092—14—5. இவற்றுள் அடங்கியது வருமான சர்க்கார் மோகினி ரூபா, 7,057—9—8. கட்டட வாடகை, நில வருமானம், மூன்று ஆண்டின் சராசரி ரூபா. 22,528—9—11. உண்டியல் வருமானம் சராசரி ரூபா. 42,234—6—5. முடிக்காணிக்கை, காவடி, குத்தகை முதலிய இதர வருமானம் சராசரி ரூபா. 25,638—5—2.

**திருவாபரணங்கள் முதலியன.**

திருவாபரணங்கள், பட்டாடைகள், முதலியன சுமார் ஒன்றரை லக்ஷம் ரூபாய் மதிப்பிடலாகும். இவைகளுள் சமீபத்தில் ரூபா. இருபதினாயிரம் செலவில் ஈரோடு வா. வே. கா. ரு. முருகேச முதலியார் அவர்கள் கிருத்திகை தோறும் முருகன் சின்னக்குமரன் கோயிற் பவனி வருவதற்கென்று அழகியதொரு தங்கமயில் வாகனமும் செய்து கொடுத்துள்ளனர். திருவாபரணங்கள் பல சமீபத்தில் திருவாளர்கள்: தென்காசி, சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பி. யு. மாணிக்கவாசகம் பிள்ளை அவர்களாலும், ஈரோடு, வா. வே. கா. ரு. முருகேச முதலியார் அவர்களாலும் கொடுக்கப்பெற்றுள்ளன. வாகனங்களில் சில, தங்க முலாம் பூசியவை தவிர, பல வெள்ளியால் ஆனவையும் உள்ளன. அவைகளுள் சிறப்பானவை நாடார் சமூகத்தாரால் உதவிய தங்க முலாம் பூசிய குதிரை வாகனமும் புதுக்கோட்டை சமஸ்தான மயில் வாகனங்களுமாகும். இவை தை, ஆவணி விழாவிற்கென்றும் அருமை வேலைப் பாடுள்ளதுமாகும். பல இன்னும் மர வாகனங்களாகவே உள்ளன. இரண்டு மரத்தேர்களும் உள்ளன. இவற்றுள் போற்றத்தகுந்தது 1938—39-ல் சுமார் ரூபா. 77 ஆயிரம் செலவில் செய்துள்ள வெள்ளித்தேர் வனப்புமிக்கதாகும்.

**நந்தனவனங்கள்.**

திருவாவினன்குடித் தெப்பக்குளம், நாகம நாயக்கர் குளம், நாகப்பட்டணத் தோட்டம், மின்சார நிலய விடுதி, இராக்கால மடம் முதலிய இடங்களிலுள்ள

நந்தனவனங்களிலிருந்து ஆண்டவருக்கும், மற்றும் தேவஸ்தான கோயில்களுக்கும் மலர்கள் தொடுத்து பூஜைகளுக்கு வருவன.

**சொத்துக்கள்.**

இந்த தேவஸ்தானத்திற்கு நன்செயில் 354 ஏ. 67 செ. புன்செயில் 426 ஏ. 55 செ. இருக்கின்றன. இவைகளிலிருந்து உத்தேச ஆண்டு வருமானம் ரூபா. 23 ஆயிரம். இன்னும் கால்நடைகளும், யானைகள் மூன்றும், கன்னிவாடி ஜமீன்தார் உதவிய கரவைப் பசுக்கள் முதலியனவும் உள்ளன.



பழநி மலையும்,
வையாவிபுரிக் குளமும்.



ஞானதண்டாயுதபாணி சுவாமியின் தங்க இரதம்
திரு. V. V. C. R. முருகேச முதலியார் அவர்களது காணிக்கை.




திருமலையின்மீது ஸ்ரீ ஆண்டவர் தங்க இரதத்தில் பவனி வருதல் 10—6—1948.

## இணைப்பு A.

### பழநித் தலச் சிறப்பு.‡

(அருணகிரிநாதர் திருப்புகழிலிருந்து)

1. "பலவின் முதுபழம் விழைவுசெய் தொழுகிய (132)*
நறவு நிறைவயல் கமுகடர் பொழில்திகழ்
**பழநி மலை** வரு புரவல! அமரர்கள் பெருமாளே."

2. "கொண்டல் சூழுமஞ் சோலைமலர் வாவிகயல் (184)
கந்து பாயநின் ருடுதுவர் பாகையுதிர்
கந்த யோடகஞ் சேர்**பழநி** வாழ்குமர பெருமாளே."

3. "பதுமவய லிற்பூக மீதேவ ரால்கள் துயில் (149)
வருபுனல் பெருக்காறு காவேரி சூழ்வளர்
**பழநி**வரு கற்பூர கோலாக லாவமரர் பெருமாளே."

---

‡ "திருப்புகழ் பெற்ற தலங்களில் பழநியே அதிகமான 96 பாடல்களைக் கொண்டிருப்பது. திருவாவினன்குடிக்கு 13 பாடலும், சிவமலை, சிவவெற்பு, சிவகிரி என 4-ம், பழநிச் சிவகிரிக்கு 2-ம், வீரை, வீராபுரி-பழநி என 6-ம், பழநி, பழநிமலை, பழநிப்பதி -பழனுபுரி என 71 பாடல்களும் உள்ளவை பற்றி - அருணகிரி நாதர் வெகுகாலம் இங்கு தங்கினர் என்பது பெறப்படும்.

"உள்ளத்தையும் உயிரையும் ஒருங்கே கவரும் தோற்றங் கொண்ட பழநிமலை கண்ணிற்பட்டபொழுதே புளகாங்கிதம் கொண்டு பரவசமுற்று இந்நாள் காறும் பழநி, பழநி, பழநி என்று தல நாமத்தைக்கூடப் படித்துச் ஜெபிக்காது போனேனே. அங்ஙனம் ஜெபிப்பவரை தலைவணங்கினேன் இல்லையே என வருந்தி —

* திரு. வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்களது பதிப்பின் திருப்புகழ் எண்களாகும். இவர்களது தவப்புதல்வர் தணிகை மணி - ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் "அருணகிரிநாதர் - வரலாறும் நூலாராய்ச்சியும் என்ற நூலையும் காண்க.

4. "பழன முழவர் கொழூவி லெழுது
பலய **பழநி** யமர்வோனே"

5. "பரம குருபர எனுமுரை பரசொடு (133)
பரவி யடியவர் துதிசெய மதிதவழ்
**பழநி மலை**தனி லினிதுறை யமரர்கள் பெருமாளே."

6. "ஆவல் கொண்டுவி ருலே சிராடவெ (101)
கோம ளம்பல சூழ்கோ யில்மீறிய
**ஆவி னன்குடி** வாழ்வான தேவர்கள் பெருமாளே."

7. "ஆத வன்கதி ரோவாது லாவிய (102)
கோபுர ங்கிளர் மாமாது மேவிய
**ஆவி னன்குடி** யோனேசு ராதிபர் பெருமாளே."

8. "பரிமளப் பாகவிற் கனிகளைப் பீறிநற் (171)
படியினிட் டேகுரக் கனமாடும்
**பழநி**யிற் சீருறப் புகழ்குறப் பாவையைப்
பரிவுறச் சேர்மணப் பெருமாளே."

9. படல வுடுபதியை யிதழி யணி சடில (168)
பசுபதி வரநதி—அழகான
பழ நிமலையருள் செய்மழலை மொழிமதலை
**பழநி** மலையில் வரு பெருமாளே."

---

படிக்கின்றிலை! பழநித் திருநாமம்! படிப்பவர்தாள்
முடிக்கின்றிலை! முருகா என்கிலை! முசியாமலிட்டு
மிடிக்கின்றிலை! பரமானந்தம் மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின்றிலை! நெஞ்சமே! தஞ்சமேது நமக்கினியே

எனப் பாடிக்கொண்டே பழநி ஊரை அடைந்தார்.

சிவமாய் விளங்குகின்ற இம் மஹா க்ஷேத்திரத்தை மனத்தினுற்கூட இதுகாணும் சேவித்ததில்லையே எனத் துக்கித்து

"உனது பழநி மலையெனும் ஊரைச் சேவித் தறியேனே"
எனப்பாடித் தமது ஆராமையை வெளியிடுகிருர்." என்பது ஆசிரியரது கருத்து.

— வ. சு. செ - அருணகிரிநாதர் வரலாறு காண்க.

10. "பவளத் தவளக் கனகப் புரிசைப் (124)
**பழநி**க் குமரப் பெருமாளே."

11. "நாரி கேரம்வ ருக்கைப ழுத்துதிர் (152)
சோலை சூழ்**பழ நி**ப்பதி யிற்றிரு
ஞான பூரண சத்தித ரித்தருள் பெருமாளே."

12. "பலமலர்க ளேதூவி யாரண நவின்று (146)
பரவியிமை யோர்சூழ நாடொறுமி சைந்து
**பழநி மலை** மீதோர்ப ராபர னிறைஞ்சு பெருமாளே."

13. "பனக மாமணி தேவிக்கு பாகரி (170)
குமரனே பதி னுலு கோர்புகழ்
**பழநி** மாமலை மீதினி லேயுறை பெருமாளே."

14. "சொம்பிற் பலவள முதிர்சோ லைகள்சூழ் (151)
இஞ்சித் திருமதிள் புடைசூ ழருள்சேர்
துங்கப் **பழநி**யில் முருகா இமையோர் பெருமாளே."

15. "பலவிற் கனிபணை மீறிய மாமர (116)
முருகிற் கனியுட னேநெடு வாளைகள்
பரவித் தனியுதிர் சோலைகள் மேவிய வகையாலே

பழனத் துழவர்க ளேரிட வேவிளை
கழனிப் புரவுகள் போதவு மீறிய
**பழநிச் சிவகிரி** மீதினி லேவளர் பெருமாளே."

16. "பரிமள கற்ப காடவி அரியளி சுற்று பூவுதிர் (169)
**பழநி மலை**க்குள் மேவிய பெருமாளே."

17. "ஆலை யும் பழனச் சோலையும் புடைசுற் (108)
**றாவி னன்குடி**யிற் பெருமாளே."

18. "பனிமல ரோடைச் சேலுக ளித்துக் (158)
ககனம ளாவிப் போய்வரு வெற்றிப்
**பழநியில்** வாழ்பொற் கோமளசத்திப் பெருமாளே."

19. "பழையபார் வதிகொற்றி பெரியநா யகிபெற்ற (160)
**பழநிமா மலை**யுற்ற பெருமாளே."

20. " வருமருவி நவமணிகள் மலர்கமுகின் மிசை சிதற (189)
மதுவினிரை பெருகுவளி மலைமீதே
வளர்குறவர் சிறுமியிரு வளர்தனமு மிருபுயமு
மருவிமகிழ் **பழநி** வரு பெருமாளே."

21. " பணிலமணி வெயில்வீசு மணிசிகர மதிசூடு (187)
**பழநி மலை** தனில்மேவு பெருமாளே."

22. " ஆட கம்புனை பொற்குடம் வைக்குங்
கோபு ரங்களி னுச்சியு டுத்தங்
**காவி னன்குடி** வெற்பினி னிற்கும் பெருமாளே."

23. " படலைச் செறிநற் கதலிக் குலையிற் (128)
பழமுற் றொழுகப் புனல்சேர் நீள்
பழனக் கரையிற் கழைமுத் துகுநற்
**பழநிக்** குமரப் பெருமாளே."

24. " நட்டுவர் மத்தள முழக்க மாமென (182)
மைக்குல மெத்தவு முழக்க மேதகு
நற்**பழநிப்**பதி செழிக்க மேவிய பெருமாளே."

25. " அரிய புகழை யமைத்த பெரிய **பழநி மலை**க்கு (188)
ளழகு மயிலை நடத்து பெருமாளே."

26. " பருதி யின்ப்ரபை கோடிய தாமெனும் (194)
வடிவு கொண்டருள் காசியின் மீறிய
**பழநி** யங்கிரி மீதினில் மேவிய பெருமாளே."

27. " பணியுமடி யார்சிந்தை மெய்ப்பொருள தாகநவில் (148)
சரவணப வாவொன்று வற்கரமு மாகிவளர்
**பழநி மலை** மேனின்ற சுப்ரமணி யாவமரர் பெருமாளே."

---

# இணைப்பு B.

## பழநித் தோத்திரப் பாடற்றிரட்டு.

---

**திருமுருகாற்றுப்படை.** — நக்கீரர்.

**திருவாவினன்குடி**

*சீரை தைஇய உடுக்கையர் சீரொடு* 126
*வலம்புரி புரையும் வால்நரை முடியினர்*
*மாசுஅற இமைக்கும் உருவினர் மானின்*
*உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்*
*என்புஎழுந்து இயங்கும் யாக்கையர் நன்பகற்*
*பலவுடன் கழிந்த உண்டியர் இகலொடு*
*செற்றம் நீங்கிய மனத்தினர் யாவதும்*
*கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்*
*தாம்வரம்பு ஆகிய தன்மையர் காமமொடு*
*கடும்சினம் கடிந்த காட்சியர் இடும்பை*
*யாவதும் அறியா இயல்பினர் மேவரத்*
*துனிஇல் காட்சி முனிவர் முன்புகப்*

*புகைமுகந்து அன்ன மாசுஇல் தூஉடை* 138
*முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்*
*செவிநேர்பு வைத்த செய்வுஉறு திவவின்*
*நல்லியாழ் நவின்ற நயன்உடை நெஞ்சின்*
*மெல்மொழி மேலவர் இன்நரம்பு உளர*

*நோய்இன்று இயன்ற யாக்கையர் மாவின்* 143
*அவிர்தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும்*
*பொன்உரை கடுக்கும் திதலையர் இன்நகைப்*
*பருமம் தாங்கிய பணிந்துஏந்து அல்குல்*
*மாசுஇல் மகளிரொடு மறுஇன்றி விளங்கக்*

கடுவொடு ஒடுங்கிய தூம்புஉடை வால்எயிற்று 148
அழல்என உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்அணி நீள்கொடிச் செல்வனும் வெள்ஏறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமைஅமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூஎயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்
நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றுஅடு கொற்றத்து
ஈர்இரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்

நாற்பெருந் தெய்வத்து நல்நகர் நிலைஇய 160
உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவரும் தலைவர் ஆக

ஏமுறு ஞாலம் தன்னில் தோன்றித் 163
தாமரை பயந்த தாவுஇல் ஊழி
நான்முக ஒருவற் சுட்டிக் காண்வரப்

பகலில் தோன்றும் இகல்இல் காட்சி 166
நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரொடு
ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீஇயர்
மீன்பூத்து அன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந்து அன்ன செலவினர் வளிஇடைத்
தீஎழுந்து அன்ன திறலினர் தீப்பட
உரும்இடித்து அன்ன குரலினர் விழுமிய
உறுகுறை மருங்கில்தம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துஉடன் காணத்
தாவுஇல் கொள்கை மடந்தையொடு சில்நாள்

**ஆவி னன்குடி** அசைதலும் உரியன்; அதா அன்று, 176

இதன் விரிபொருள் பின்வருமாறு :—

முருகன் திருவாவினன் குடியில் எழுந்தருளி யிருக்கிறான். முனிவரும், கந்தருவரும், அரம்பையரும், திருமாலும், சிவபிரானும், இந்திரனும் வருகின்றனர் அவனைத் தரிசிக்கும்பொருட்டு. அந்தக் கூட்டத்தில் யான், என்ற உணர்ச்சியை இழந்த முனிவர்களே முன்னால் நிற்கின்றார்கள்.

126—137 "அவர்கள் மரவுரியை உடையாக அணிந்தவர், அழகோடு வலம்புரியை யொத்த வெண்மையான நரை முடியை உடையோர் - மாசு இல்லாமல் விளங்கும் திருமேனியை உடையோர், மான்தோலைப் போர்த்த தசைகெட்ட மார்பில் எலும்புகள் மேலே தோன்றி அசையும் உடம்பையுடையோர், நல்ல நாட்கள் பலவற்றில் ஒருங்கே உணவை உண்ணாதுவிட்டவர். பகையும் இம்சையும் நீக்கிய மனத்தினர், கற்றவர் சிறிதும் அறியாத பேரறிவினர், கற்றவர்களுக்கு எல்லையாக நிற்கும் தலைமை யுடையோர், காமமும், மிக்க சினமும் நீத்த அறிவுடையோர், சிறிதளவேனும் இடும்பை யென்பதை அறியாத இயல்புடையோர், மனம் பொருந்த வெறுப்பில்லாத ஞானம் பெற்றவர்."

[இந்த முனிவர்களை முன்னிட்டுக்கொண்டு தேவர்கள் வரும்போது, முருகனுக்கு விருப்பமான இசையைப் பாடுவோராகிய கந்தருவர் ஆணும் பெண்ணுமாக உடனழைத்து வந்திருக்கின்றனர்: அவர்கள் முருகன் சந்நிதானத்திலே, அன்பும் பெருமிதமும்கொண்டு, மெல்லப்பாடி யாழை வாசிக்கிறார்கள்.]

138—142 அவர்கள் "புகையை முகந்தாற்போன்ற மெல்லிய அழுக்கில்லாத தூய உடையையும், மொட்டு அவிழ்ந்த மாலையை அணிந்த மார்பையும் உடையவர்களும், காதிலே பொருத்தி வைத்துப் பார்த்து சுருதி கூட்டிய நரம்புக்கட்டையுடைய நல்ல யாழிலே பயிற்சியுடையவர்களும்; அன்புடைய நெஞ்சையும் மெல்லிய மொழிகளையும் உடையவர்களுமாகிய கந்தருவர் இனிய நரம்பை மீட்டிப்பாட" — [மகளிரும் பாடுகின்றனர்.]

143—147 அவர்கள் "நோய்களே இல்லாமல் அமைந்த உடம்பை உடையோர், மாமரத்தின் விளங்கும் தளிரை ஒத்த மேனியையுடையோர், விளங்குந்தோறும் பொன்னை உரைத்தாற் போன்ற தேமலையுடையோர், இனிய ஒளியை யுடைய மேகலையைத் தாங்கியதும் தாழ்ந்தும் உயர்ந்தும் உள்ளதுமாகிய (அல்குல்) - பின்புறமுடையோர், ஆகிய குற்றமற்ற மகளிரோடு அப்பாடல் குற்றமில்லாமல் விளங்க —

[தேவர் வருகை: முன்னல் கருடக்கொடியோன் - அடுத்தபடியாக இடபக்கொடியோன் - கடைசியில் இந்திரன் - முருகனைக் காண வருகின்றனர்.]

148—159 "விஷத்தோடே உறைக்குள்ளே கிடந்த துவாரத்தையுடைய வெள்ளிய பற்களையும், நெருப்பைப் போல மூச்செறியும் பயங்கரமான மிக்க வலியையும் உடைய பாம்பு இறக்கும்படியாக அடிக்கும் பல கோடுகளையுடைய வளைந்த சிறகைப் பெற்ற கருடனை அணிந்த உயர்ந்த கொடியை உடைய திருமாலும், வெள்ளிய இடபத்தை வலப்பக்கத்தே துவசமாகத் தூக்கியவனும் பலர் புகழும் திண்ணிய தோளையுடையவனும், உமாதேவியார் ஒரு பாகத்தே தங்கி விளங்குபவனும், இமையாத முக்கண்ணை உடையவனும், திரிபுரத்தை அழித்த வலிமை மிக்கவனுமாகிய சிவபிரானும், ஆயிரங்கண்களையும் நூறுகிய பல வேள்விகளை முடித்து அவற்றினிடையே வரும் பகையை வென்று கொன்ற வெற்றியையும் உடையவனும், நான்காக உயர்ந்த கொம்பும் அழகிய நடையும் உடையதும் தாழ்ந்த பெரிய வளைந்த கையை உயர்த்தியதுமாகிய ஐராவதத்தின் பிடரியிலே ஏறிய ஐசுவரியம் மிக்கவனுமாகிய இந்திரனும்—[எதற்காக வருகிறார்கள்? பிரமதேவன் பிரணவப் பொருள் தெரியாது விழிக்கவே, முருகனால் சிறையிடப்பட்டான் - அவன் சிருஷ்டித் தொழில் தடைப்பட்டுள்ளது. சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற முத்தொழிலும் ஒன்றொடொன்று தொடர்புடையது - சிருஷ்டித் தொழில் இல்லையாகவே ஏனைய இரண்டும் நடக்கமுடியாமல் போயின. பிரமனைச் சிறையிட்ட பிள்ளைப் பெருமானுடைய முனிவைத்தீர்த்து வரம் வேண்ட வருகிறார்கள். பழையபடியே மூவர் தொழிலும் நடக்கவேண்டும், உலகம் உய்ய.]

160—162 "நான்கு பெரிய தெய்வங்களின் பாதுகாப்பை உடையதும், நல்ல நகரங்கள் நிலைபெற்றதுமாகிய உலகத்தைப் பாதுகாக்கும் ஒன்றுபட்ட சங்கற்பத்தையுடையவர்களும், பலராலும் புகழப்பெறுபவர்களுமாகிய அயன், அரி, அரன் என்னும் மூவரும் பழையபடியே தலைவராகும்பொருட்டு. —[இந்த மூவரும் வருவதற்கு காரணம் - நான்முகனை சிறையினின்றும் விடுவித்தற்கு - இப்பூவுலகத்தில் வந்து முருகனை தரிசிக்கிறார்கள்.]

163—165 "இன்பத்தை மிகுதியாக உடைய பூவுலகத்திலே தோன்றித் தாமரையினாற் பெறப்பெற்றவனும் கேடில்லாத பல ஊழிக்காலத்தை ஆயுளாக உடையவனும் நான்முகனுமாகிய ஒருவனைக்குறித்து (மேலே சொன்ன மூவரும்) தன்னை வந்து தரிசனம் செய்ய - முருகன் ஆவினன் குடியில் எழுந்தருளியிருப்பான் என்று சொல்ல வருகிறார் - [தேவர்களுடன் கூட மற்ற தேவர்களும் வருகிறார்கள்.]

166—176 "சூரியனைப்போலத் தோன்றும் மாறுபாடில்லாத தோற்றத்தையும் நான்காக வேறுபட்ட இயல்பினையும் உடைய முப்பத்து மூவரும், பதினெண் கணத்தினராகிய உயர் பதவியைப் பெற்றவர்களும், விண்மீன்கள் தோன்றினாற்போன்ற தோற்றத்தை உடையவர்களாய், நட்சத்திர மண்டலத்தளவும் தாக்கிக் காற்று எழுந்தாற்போன்ற வேகமான நடையையுடையவர்களாய், காற்றினிடத்தே நெருப்பு எழுந்தாற்போன்ற வலிமையை உடையவர்களாய், நெருப்பு உண்டாகும்படி இடி இடித்தாற்போன்ற குரலை யுடையவர்களாய், மேலானதாகிய தமக்குற்ற வேண்டுகோளினால் தாம் பெறுதற்குரிய முறைமையினைக்கொள்ளும் பொருட்டு, ஆகாயத்தே சுழற்சியையுடையவராய் வந்து ஒருங்கே தரிசிக்க, கேடில்லாத கற்பையுடைய மடந்தையாகிய தெய்வயானையுடன் சிலகாலம் ஆவினன்குடியிலே இருத்தலும் உரிமையாக உடையவன்" என்பது.

திருமுருகாற்றுப்படை விரிவுரை நூல் திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்களது வழிகாட்டியினின்று நன்றியுடன் தொடுக்கப் பெற்றது.

— அருணகிரிநாதர்.

**திருப்புகழ்.**

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித சாமீ நமோநம வெகுகோடி-

நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம பரசூரர் ;

சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ-

தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவகுஞ்சரி பாகா நமோநம அருள்தாராய் ;

ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு மறவாத-

ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மநோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா ;

ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி-

ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
**ஆவி னன்குடி** வாழ்வான தேவர்கள் பெருமாளே.

* * *

— அருணகிரிநாதர்.

வரதா மணிநீ யெனவோரில்-
வருகா தெதுதா னதில்வாரா ;
திரதா திகளால் நவலோக
மிடவே கரியா மிதிலேது ;
சரதா மறையோ தயன்மாலும்-
சகலா கமநூ லறியாத ;
பரதே வதையாள் தருசேயே
பழநு புரிவாழ் பெருமாளே.

**பழநிப் பிள்ளைத் தமிழ்.** —விசயகிரி வேலச்சின்னோவையன்.

சீரார் நலஞ்சேர் பூவுலகில் தேவா சுரரின் மற்றையரில்
தினமு முனது கொலுக்காணச் செல்லா தாரார் திறைவளங்கள்
தாரா தாராருனதுபதந் தனையே வணங்கித் தொழுவேண்டித்
தழுவா தாரா ரெவ்வேளை சமயங் கிடைக்கு மெனநினைந்து
வாரா தாரா ருனதருளை வாழ்த்திப் புகழ்ந்து துதிக்கமனம்
வசியா தாரார் பணிவிடைகள் வரிசைப் படியே நடத்தாதார்
ஆரா ரெனத்தா லாட்டுகின்ற வரசே வருக வருகவே
அருள்சேர் பழநிச் சிவகிரிவா ழையா வருக வருகவே.

**பழநுபுரி மாலை.** — மாம்பழக் கவிச்சிங்க நாவலர்.

சராசர சீவ தயாநிதி நீயிச் சமயமென்முன்
வராவிடில் யானினி யாரை நினைத்து வரம்பெறுவேன்
குராவடி வேல குழந்தைக் குமர குருமணிச்சூட்
டராவணை மால்பர வும்பழ நுபுரி யாண்டவனே.

கையா லுனைத்தொழச் சென்னியி னுலுன் கழல்வணங்க
மெய்யா யடிக்கடி வாக்காற் றுதிக்க விதித்துமனம்
நையா வியற்கையு நல்கினி யென்னை நழுவவிடேல்
ஐயா வனக்கப யம்பழ நுபுரி யாண்டவனே.

**பழநி பதிற்றுப் பத்தந்தாதி.** —பெ. **அண்ணாமலைக் கவிராயர்.**

"போக்கு வரவு முயிர்திரியப்
புலையாஞ் செனன மெடுத்தெடுத்துத்
தாக்கு முதிரக்கருக்குழியிற்
சலிக்கும் படிக்கோ வெனைவிதித்தாய்
நோக்கு முகிலால் மயிலாட
நுவல்வா னரங்கள் தென்னைமடல்
சாய்க்கு மதுரப் **பழநி**நகர்த்
தலைவா யெவர்க்குந் தயாபரனே.

**பழநிமலை வடிவேலர் சந்நிதி முறை.**

மதிமவுலி மார்பில்விளை யாடுகம லங்கவுரி
மழுதனி லுதித்தகமலம்
வண்டமிழ்ச் சங்கத்திலிருந்தகம லம்பிரமன்
வந்தனைகள் செய்தகமலம்
அதிகவிதை அருணகிரி சூட்டுகம லந்தெய்வ
யானைகுற வாசகமலம்
அணிமணி திருத்திப் புனைந்தகம லம்பணிசெய்
அடியர்வினை மாற்றுகமலம்
கதிர்முலைக் குறமங்கை தினைவனப் புற்களும்
கற்களும் முறுத்துகமலம்
கானமயி லேறிவிளை யாடிநட மாடுசூரர்
கணங்கள்கொண் டாடுகமலம்
பதிதனும் என்னுடைய வன்மன மெனுங்கரும்
பாறையில் முளைத்தலருமோ
பழமறை சொலியசீல தொழுமவர்க ளனுகூல
**பழநிமலை** வடிவேலனே.

---

இணைப்பு C.

# முருகனின் அருட் தத்துவங்களுட் சில.

---

## "பழம் நீ" - விளக்கம்.

---

[சைவ சித்தாந்த சரபம் சிவத்திரு: ஈசான சிவாசாரியர்.]

*"கூறுடை யாளுங் குன்றுக் குணப்பெருங் குன்று ஞானப்*
*பேறுடைப் **பழநீ** யென்னப் பெயரது மருவி யெங்க*
*ளாறுமா முகவன் வைகும் நகரமு மன்று தொட்டு*
*வீறுதொல் **பழநீ** யென்றே விளம்பின வுலக மூன்றும்."*

— *பழநித் தலபுராணம்.*

இங்நிலவுலகத்திலே மக்கட்பிறப்புடைய வுயிர்களுக்கு இறைவன் பலவகையான இன்பங்களையும் கூட்டுவிக்கிறார். அங்ஙனம் கூட்டுவித்த இன்பம்நிலைத்தற்பொருட்டும்,மேலும்மேலும் இன்பம் பெருகும் பொருட்டும், அவர் செய்த நன்றிக்கு அறிகுறியாகவும் நாம் அவ்விறைவனைத் திருக்கோயிலிலே சென்று வழிபட்டு வருகிறோம். அங்ஙனமே, தேவர்களும் முனிவர்களும் நீண்ட வாழ் நாளும், நிலைத்த இன்பமும் பெறவேண்டி அப்பெருமானை திருக் கயிலையிலே சென்று நாள்தோறும் வணங்குவர். "வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் மனநின்பால் தாழ்த்துவதும், தாமுயர்ந்து தம்மையெல்லாம் தொழவேண்டித்" தொடுத்த மலரொடு தூபமும் சாந்துங்கொண்டு எப்பொழுதும் அடுத்து வணங்குவர்.

அங்ஙனமே, ஒரு நாள் இறைவனை நோக்கிச் சென்று வணங்கும் பொருட்டு நாரதர் கயிலை செல்லக் கருதினார். பெரியோர்கள் முன்னும் – குரு – குழந்தைகள் முன்னும், திருக்கோயிலுக்குச் செல்லும்போதும், ஏதேனும் அன்பின் கையுறையாக ஒன்று எடுத்துக்கொண்டு செல்லவேண்டும் என்ற வழக்காற்றின்படி எதனைக் கொண்டு செல்லலாம் என்று ஆராய்ந்தார். இறைவன் இன்பத்

திற்கு நிலைக்களமாயுள்ளவன் என்பதனையும், "வேண்டுதல் வேண்டாமை" இல்லாதவரும், என்றும் மகிழ்ச்சியுடையவருமான அவருக்கு தான் ஒன்றைக்கொடுத்து மகிழ்விக்கமுடியாது என்பதனையும் உணர்ந்தார். நாம் விரும்பும் இம்மை நலங்கள் பலவற்றையும், முத்தியாகிய ஒரு சிறந்த பலனையும் வேண்டி அதற்காக எல்லாப் பலன்களையும், எல்லா நலன்களையும் கூட்டுவிக்கும் இறைவனுக்கு, புரைகள்தோறும் கனியும் தீஞ்சுவைமிக்க நல்ல **மாதுளம்பழம்** ஒன்றைக் கொண்டுபோகக் கருதினார். இறைவன் அடியார்களுக்குச் செய்யும் பெருங்கருணைத் திறத்தை நினைந்து அவருடைய உள்ளத்தே புரை, புரை கனியுமாறு போல, புரை புரையாகக் கனியும், கனி அதுவேயன்றோ? அதனால், நாரதர் அத்துணைச் சிறந்த மாதுளம்பழம் ஒன்றை எடுத்துக்கொண்டு கயிலைக்குச் சென்று, இறைவன் முன் வைத்து வணங்கினர்.

அப்போது உமாதேவியாரும் இடரைக் களையும் எந்தையாராகிய விநாயகப்பெருமானும் தமது அடியார்களுக்கு இன்பத்தைச் செய்பவராகிய முருகப்பெருமானும் அங்கே இருந்தனர். அதனைப் பெறுதலில் விருப்பமுடைய இரு குமாரர்களும் அந்த நல்ல மாதுளம் கனியில் தமது கருத்தைச் செலுத்தினர். அந்தத் தீஞ்சுவைக் கனியமுதைத் தமது குமாரர்கள் என்ற ஒரே காரணம் பற்றிச் சிவபெருமான் அவர்களுக்கு வழங்கவில்லை. திருக்கயிலாயத்திலே விநாயகப்பெருமானையும், முருகப்பெருமானையும் எங்ஙனம் சிவபெருமான் நடத்துகிறாரோ அதுவன்றோ உலகத்திற்குக் கட்டளை ஆகும்? அதுவன்றோ வழிகாட்டியாகும்? ஆனதுபற்றி இறைவன் குழந்தையைப்பெற்ற தாய்தந்தையர்களுக்கும், செல்வந்தர்களுக்கும், அறிவுள்ள பிள்ளைகளுக்கும் இன்பத்தில் விருப்பமுடையவர்களுக்கும் ஒரு வழி காட்டவேண்டி, அந்த மாதுளம் பழத்தைக் கையில் எடுத்துக்கொண்டு "எனது இனிய மைந்தர்களே! இந்தப்பழம் நம்மிடத்தே பேரன்பு வைத்துள்ள நாரதர் கொண்டுவந்ததென்பதனை கருவிலால் நீங்கள் இருவரும் அறிவீர்கள். இது பதனை பலத்தால் ஒன்றேயாயினும் புரைதோறும் இனிக்கும் பல விதைகளையுடையது. அம்மட்டோ! அடியார்கள் நம்மீது வைத்த அன்பின் விளைவானது. ஆனதால் இதற்குள்ள சுவை மற்ற

மாதுளம் பழத்திற்கு உள்ளதுபோலன்று. எனக்கு நீங்கள் எப்படி இனியரோ அதுபோலவே இந்த அன்பின்விளைவான கனியும் மிக இனியது. அந்த இன்பத்தை நீங்கள் எளிதில் அடைவீர்களானுல் அந்தச் சுவை தோன்ருது. மிக நல்ல உயர்ந்த பொருளைப் பெரிது முயன்றே அடையவேண்டும். அப்போதுதான் அதன் அருமைப் பாடு புலனுகும். "போனகம் என்பது தான் உழந்து உண்டலே" அன்றே? உழைப்பிலல்லாது வந்த பொருளுக்கு கௌரவமேது? தந்தையிடத்திலுள்ள பொருளேயாயினும் தந்தை விதித்த அற வழியிலே நின்று நல்ல தொண்டுகளைச் செய்து அதனை அநுபவித் தாலன்றி அதனுல் ஏதேனும் ஒரு நன்மை உண்டாகுமா? அது அறிவுமன்று; இளைஞர்களுக்கு அழகுமன்று; ஆண்மைமிக்க செயலுமன்று. ஆனதால், உங்களுக்குள் ஒரு நொடியில் யார் இவ்வுலகை வலம் வருகிருர்களோ, அவர்களுக்கே இந்தப் பழம் உரியது" என்ருர்.

அங்ஙனம் அருளிச்செய்தவுடனேயே அதுகேட்ட இளையவ ரும் வெற்றியின்மிக்க வீரரும், தீவிரமான முயற்சியுடையருமா கிய முருகப்பெருமான் சும்மா இருப்பாரா? உடனேதான் மயிலின் மீது ஆரோகணித்து ஒரு நொடியில் உலகத்தை வலம்வருவார் ஆயினர். அப்போது அறிவான் மூத்த பிள்ளையாராகிய விநாயகப் பெருமான், இறைவனே உலகெலாமாயிருப்பதை உணர்ந்தார். அவரை வலம்வருதலே உலகத்தை வலம் வருதல் எனக்கருதி இறைவனை வலம் வந்தார். நீரே உலகெலாமா யிருக்கின்றீர்; உம்மையன்றி உலகமில்லை; உம்மை வலம் வந்ததே "உலகை வலம் வந்ததாகும்" என்று,வணங்கி நின்றனர். அதனை உணர்ந்து மகிழ்ந்த பெருமான் மாதுளம் பழத்தை அவருக்கு அளித்தருளி னர். அவர் அதனைப் பெற்றுக்கொண்டனர். வலம் வரச் சென்ற முருகப்பெருமான் விநாயகப்பெருமானது கரத்தே கனி யிருப்பதைக் கண்டு, அதனைத் தனக்குத் தரவில்லையென்று கோபித்தருள்பவர் போன்று கயிலையினின்றும் நீங்கி இந்தத் தென்னுட்டிலே திருவாவினன்குடி என்னும் திருத்தலத்தின் ஞான நன்மலைமீது வீற்றிருந்து அருளினர்.

உலகத்திலே மக்கள் ஒருவரையொருவர் கோபித்துக்கொள் வது இயல்பு. முருகப்பெருமானும் சிவபெருமானும் வேறல்லர். சாமானியமாக, முனிவர்களே காமத்தையும், கோபத்தையும் கோபிப்பவர்கள். அதனால் முனிவர்கள் எனப்படுவர். அத்துணை தேவர்க்கும் முனிவர்க்கும் அரியராகிய சிவபெருமானின் வேறல் லாத முருகப் பெருமானுக்குக் கிடைக்காத பொருள் ஒன்று உண்டா? அதுபற்றி அவருக்குக் கோபம் விளைவது உண்டா? அப்படியிருக்க, அவருக்கு மாதுளம் பழம் கிடைக்காமையால் கோபம் விளையுமென்றால் அது கோபமாகுமா? இந்தச்செயலி னால் நமக்கு விளைந்ததொரு அருளுபதேசமே ஆகுமல்லவா? அது தான் என்ன? அங்ஙனம் அருட்கோபத்தின் தத்துவத்தை நமக் குப் புலப்படுத்துவார்போன்று, கயிலையினின்றும் தமது அருமைக் குழந்தையை நாடி ஞானநன்மலையேறி அம்மையும் அப்பனும் அருள் வழங்குகின்றார்கள். அதுதான் என்னே? உலகத்திலுள்ள மக்கள், எந்தச்செயலையும் எண்ணிய எண்ணியாங்கே எய்த மாட்டாமைக்கு ஏதுவான இடர்ப்பாடுகள் நீங்கக் கருதி "இடரைக் களையும் எந்தாய்" என்று மூத்தபிள்ளையாகிய விநாயகரைப் போற்றுவர். வீரத்தை வேண்டி வீரபத்திரரையும், துர்க்கையை யும் வணங்குவர்; கல்வியை வேண்டிக் கலைமகளைப் போற்றுவர்; செல்வத்தை நாடினோர் திருமகளைத் துதிப்பர்; ஆற்றல் (சக்தியை) வேண்டினோர் சக்தியை நாடிப் பத்தி பண்ணுவர்; முத்தியை வேண்டினோர் ஈறில் பரம்பொருளாம் இன்ப உருவினரான சிவ பெருமானையே நோக்கிக் கடுந்தவம் புரிந்து கதியடைவர். இஃது எளிதிலே வாய்ப்பதொன்றாகுமா? "பல்லூழி காலம் பயின்றரனை யர்ச்சிக்கில், நல்லறிவு சற்றே நகும்;" "எண்ணிலி யூழி தவம்செய் தங்கீசனை, யுண்ணிலைமை பெற்ற துணர்வு" என்பன பிரமாண மானதால் இத்துணைக் காலநீட்டிப்பும் அருமையும் கருதி, மேலே குறித்த கல்வி, செல்வம், வெற்றி, சக்தி, பலவகை சித்திமுக்தி முதலிய எல்லாப் பேற்றையும் மக்களுக்கு மிக எளியராய் இனிய ராய் வழங்குபவரும், பாருக்குள்ளே கலியுகத்திலே கண்கண்ட பரமதெய்வமாய் மேலே காட்டிய எல்லா தெய்வவடிவினராய் விளங்குபவர் நமது கந்தநாதனே என்பதை நமக்கெல்லாம்

புலப்படுத்தி நம்மை உய்விக்குமாறு முருகப்பெருமானை நோக்கி அம்மை அப்பரிருவரும் **"நீயே சிவஞானப் பழம்"** ஆவை; உனக்கு வேறு பழம் வேண்டுமோ? பழத்தின் சுவைபோல உயிர்க ளிடத்தே பிரிவர நிற்பவன் நியேயல்லவா? அடியார்களுக்குகந்த "கனி நீயே யாவாய்" ஆதலால் **"பழம் நீ"** என்று திருவாய் மலர்ந்தருளி எல்லோரும் உய்தி பெறுவதற்கு உறுதுணையாக முருகப்பெருமானை நோக்கிப் பல இனிய நல்மொழிகளை அருளி உலகத்திற்கு உண்மையுணர்த்தினர்.

• இதனல், இறைவன் செய்த நன்றியைக் குறித்து நாம் திருக் கோயிலிலே சென்று வணங்கவேண்டும் என்பதும், தேவர்களும் அங்ஙனமே வணங்குவார்கள் என்பதும், வணங்கும்போது தமது முயற்சியினல் தேடிய நல்லபொருள்களை இறைவனுக்கு அன்பின் கையுறையாக வைத்து வணங்கவேண்டுமென்பதும், அரிய பெரிய முயற்சியுடையார்க்கே சிறந்த இன்பம் வாய்க்குமென்பதும், பொன்னும் பொருளும் போகமும் திருவும் இன்பமும் வேண்டி முருகப்பெருமானை நோக்கியே வழிபாடு செய்து எல்லா நலன் களையும் பெற்று இன்பவாழ்வு பெறுதல் வேண்டும் என்பதும் உணர்த்தப்பட்டன.

**வள்ளி திருமண விளக்கம்.** வேறு.

சிவஞான போதம்:

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு,
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே!"

என்னும் எட்டாம் சூத்திரத்திற் கூறியவாறு உயிர் தன் னியல்பு அறியாது கருவிகளின் இயல்பே தன்னியல்பென மயங்கி உணர்வற்றுக் கிடக்கும்பொழுது இறைவன் தோன்றி உணர்வினை நல்கி, உபதேசித்துத் தன்னேடு இரண்டறச் சேர்த்துக்கொள்ளுவான் என்பதே இதன் தத்துவமாம்.

பராசக்தியாகிய வள்ளிநாயகி தினைப்புனங் காப்பது, உயிர் தன்னியல்பறியாது, வேடர் சேரியில் வளரும் ராச குமாரனைப்போலக் கருவிகளால் மயங்கி நிற்கும் என்பதனைக் குறிக்கின்றது.

இறைவன் வேடனாய் வந்ததும், வேங்கைமரமானதும்: மயங்கிக் கிடக்கும் உயிரினது இயல்பை இறைவனே எழுந்தருளி உணர்த்துகின்றான் என்பதை இவை விளக்குகின்றன. வேடனாய் வந்து அஞ்ஞானத்தினைப் போக்கியும், ஞான உணர்ச்சிக்குரிய அவாவினை எழுப்பியும் அடிமுதல் மறைகளாகவும், நடுப்பாகம் சிவ நூல்களாகவும், கிளைகளனைத்தும் கலைகளாகவும் உடைய வேங்கைமரத் தோற்றத்தால் ஞானத்தினை நல்கியும் அருள் செய்கின்றான் என்க.

முருகன் கிழவனாய்த் தோன்றியது: இறைவன் உயிர்களுக்குக் குருவாகவும் எழுந்தருளித் தீக்ஷை செய்து மலத்தினை அகற்றுவான் என்பதை உணர்த்துகின்றது.

முருகன் யானையை வரவழைத்தது: இறைவனே குருவாய்த் தோன்றி உபதேசமும் செய்வான் என்பதை இது உணர்த்தும். யானை, இறைவனது ஓங்காரப் பிரணவ சொரூபமாகும்.

யானையைக்கண்ட வள்ளி நாயகி முருகனைப் பற்றிக் கொண்டது: தன் சிறப்பியல்புணர்ந்து உபதேசம்பெற்ற உயிர் கருவிகளை நீக்கிச் சிவத்தை நாடிச் சென்றடையும் என்பதை உணர்த்துகின்றது.

வள்ளி முருகனது தேவியானது: இறைவனை உணர்ந்து அவனது அன்பிற்குப் பாத்திரமான உயிர் அவனோடு இரண்டறக் கலக்கும் என்பதை உணர்த்தும்.

**சஷ்டிவிழாவாகிய சூரசங்காரத்தின் தத்துவம்.**

இறைவனது கருணை — அறக்கருணை, மறக்கருணை என இருவகைப்படும். நல்லவர்களை அறக்கருணையாலும் பொல்லாதவர்களை மறக்கருணையாலும் இறைவன் ஆட் கொள்ளுகின்றான். சூரன் தான் பெற்ற வரத்தால் நன் மக்களுக்கும் தேவர்களுக்கும் துன்பம் பல செய்தான். அவன் மேலும் இவ்வுடலோடு நீண்ட காலம் இவ்வுலகில் தங்கினால் பலப்பல பாவச் செயல்களைச் செய்து மீளா நரகத்திற்கு ஆளாவான் என்பதனையும் தவத்தால் வரம் பல பெற்ற இவன் பெரும் பாவியாகிவிடக் கூடாது என் பதனையும் கருணையால் நினைந்து, இறைவன், குமாரநாயக னாகத் தோன்றி வேலாயுதத்தால் அவனது உடலை இரு கூறாக்கி, அவற்றுள் ஒன்றினை மயில் வாகனமாகவும், மற் றொன்றினைச் சேவற்கொடியாகவும் தன்னோடு சேர்த்துக் கொண்டான். இதனை விளக்கவே, திருவிழாக்களில் சூர சங்காரம் முடிந்தவுடன் முருகனை மயில் வாகனத்தில் ஏற்றுகின்றார்கள். அப்பொழுது அவனுக்கு சேவல் கொடியாகிறது. இதிலிருந்து முருகன் சூரனைக் கொல்ல வில்லை என்பதும் மறக்கருணையால் அவனை ஆட்கொண் டான் என்பதும் நன்கு விளங்குகின்றன.

பெற்றோர்கள் தம் பிள்ளைகளிடம் நோய் ஒன்று கண் டால் தாமே அந்நோயினை மாற்றவேண்டியதைச் செய் கின்றார்கள். கத்தியால் அறுத்தும், சுட்டும், கடுந்துன்பம் செய்வித்தும் அதனைப் போக்குகின்றார்கள். இச்செயல் அவர்களுக்குப் பிள்ளைகளிடமிருக்கும் அன்பினைக் காட்டு கிறதா? பகைமையைக் காட்டுகிறதா? அன்பினை

யல்லவோ காட்டுகின்றது. அதுபோல் நம்மிடம் பற்றிய பாவங்களைத் தீர்ப்பதற்கும் பரமன் கருணையாலே இவை போல்வனவற்றைச் செய்கிறான். இதனை,

தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தஞ்சொ லாற்
வந்திடா விடிலுறுக்கி வளாரினா லடித்துத் தீய [றின்
பந்தமுமிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்றோ வீசனார் முனிவு மென்றும்

எனவரும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தினாலும் அறிக.

சூரன் ஆணவ மலம் நிறைந்த ஓர் உயிர். ஆணவ மலம் முதிர்ந்த உயிர் ஒருபோதும் இறைவனைக் காணாது. அம்முனைப்பு ஒடுங்கியபோது அது இறைவனைக் காணும். ஆணவமலம் நிலைநிற்கும் காலம்வரை அது பிறந்து இறந்து பேதமையுற்றுத் தவிக்கும்; ஆதலால், அம்முனைப்பாம் அரக்கனைக் கொன்றாலல்லது உயிருக்குப் பிணி மூப்புச் சாக்காடொழித்து இறைவனோடு ஒன்றி வாழ இயலாது. அவ்வாறு ஆணவ மலத்தைப் போக்கும் ஆற்றலுடையவன் இறைவனே. அவன் உயிர்களிடத்துக் கொண்ட கருணையால், ஆணவ மலமாகிய சூரனது தூல உடம்பைக் கொன்று ஆணவ மலம் நீங்கின அநாதித்தன்மையுள்ள ஆத்மாவாகிய அவனது உயிரினைத் தன்னோடு சேர்த்துக் கொள்கின்றான் என்பது தத்துவம்.

* * *

காக்கக் கடவியநீ காவா(து) இருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா — பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி.

## இணைப்பு D.

### திருமலைநாயக்கரது தளவாய் ராமப்ப அய்யன் கொடுத்த பட்டயம்.

(தாம்பிர சாசன நகல்)

---

**தெண்டபாணி துணை.**

"சொச்ச ஸ்ரீ ராஜாதி ராஜன், ராஜப்பரமேஸ்வரன், ராஜ மார்த்தாண்டன், ராஜகாண்டீபன், ராஜகேசரி, ராஜராமகேசரி, மன்னர் மண்டலேஸ்வரன், துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்யும், மகுடமன்மத சுகுடசுத்த விருதுஷ்ட நிஷ்டூர கோஷ்ட கோலாகலன், விகுடமிடு மருவலர்கள், மகுடமுடி திருகிவிழ, விருதுகங்கணங்கட்டும் வீரப்பிரதாபன், மும்முரசறையும் முத்தமிழ் விநோதன், தவனெறியுள்ளவன், சத்தியவாசகன், சிவநெறி தழைக்க திருநீறுமிட்டவன், சொக்கநாதருக்கு மூக்கிய குணவான், கச்சியிலதிபதிபன், உச்சிதபோஜன், அச்சுத அரியின் மெச்சிய பாலன், வங்கி நாராயணன், மருவலர்கள் கண்டன். ஸ்ரீமது கச்சித் திருமலை நாயக்கர் அவர்கள் தளவாயாகிய மகா-ள-ள-ஸ்ரீ ருமப்பய்யர் அவர்கள் சாலியவாகன சகாப்தம் 1366 கலியுக சகாப்தம் 4578-க்கு மேல் செல்லாநின்ற ஸ்ரீமுகா-ஸு தை-மீ 16-உ பூர்வ பக்ஷம் சப்தமியும், ரோகணி நக்ஷத்திரமும், சோம வாரமும், சுபநாமயோகமும், பத்திரவாகரணமும் பெற்ற சுபதினத்தில் தாம்பூரசாசனப் பட்டயம் பிறப்பிவைத்தபடி, தாம்பூரசாசனமாவது: ஸ்ரீ தெண்டாயுதக் கடவுளாருக்கு அஷ்ட பந்தனஞ்செய்துவைக்கும் முன்னிலைக்கு இந்த ஸ்தலம் போகர் வாடையாய் புலிப்பாணிபாத்திர சுவாமியார் பூசை செய்து வந்த படியினாலே இப்போது ருமப்ப அய்யர் அவர்கள் அவர்கையினாலே தீர்த்தப்பிரசாதம் வாங்கக்கூடாதென்று நினைத்து பாளையகாரரும் ருமப்ப அய்யர் அவர்களும் புலிப்பாணிபாத்திர சுவாமிகள் மனது சம்மதப்படுத்தி அவருடைய பூசைமுராசுக்கு குமஸ்தாவாக பூஜை பரிசாரகத்துக்கும் கொங்குதேசத்திலிருந்து கொடுமுடி சரஸ்வதி அய்யன் 1, மருதூர் தம்பாவையன் 2, நாட்டார அய்யன் கோவில் சுப்பய்யன் 3, கரூர் முத்தய்யன் 4, கடம்பர்

கோவில் அகிலாண்டய்யன் 5 இவர்களைப் பாளையக்காரரவர்கள் வரவழைத்து, கொடுமுடி சரஸ்வதி அய்யனைக் குருக்களாகவும், மைத்த நால்வரை பூசைப்பரிசாரகம் நம்பிமார்களாகவும் நிய மித்து பூர்வா பூர்வமாய் தெண்டாயுதக் கடவுளாருக்கு பூசைகள் செய்துகொண்டுவந்த புலிப்பாணிபாத்திர உடையாருக்கு தெண் டாயுதபாணிக் கடவுளாருக்கு அபிஷேகமாகி நம்பிமார்களுக்கு வரப்பட்ட நிர்மால்யம் சொர்ண புஷ்பங்களில் கால் பங்கு கொடுத்துவரும்படியாயும் மூலஸ்தானமாகிய துர்க்கையம்மன், மரகதலிங்கம், வலம்புரிச்சங்கு முதலாகிய வாலை, புவனை, திரி புரைக்கும் பூசனை செய்துகொண்டு நவராத்திரி பூசையும் செய்து பிரதமை முதல் தசமி வரையில் மூன்று பட்டுப்பரிவட்டமும் கட்டிக்கொண்டு தேவதாமரியாதைகளுடன் அம்பு போட்டுக் கொண்டு வருகிறதும், பண்டாரங்கள் இருபத்திநாலுபேரும் மாமூல் வழக்கப்படிக்குத் திருமஞ்சனம், மாலை, சந்தனம், வில்வம் வகையரு, பள்ளியறை கட்டியம், ஓதுவார், கந்தப்புராணம், திருப்புகழ், திருவலகு, சட்டக்கால், தூபக்கால், பரிவட்டம் துவைக்கிறது, கொல்லச்சேவகம், உபயத்திருமஞ்சனம் வகை யரு கட்டளை இதுமுதலானதெல்லாம் என்றென்றைக்கும் மாமூ லாய் பண்டாரங்களைப் பணிவிடை செய்துகொண்டு வரும்படி யாய்க் கட்டளையிட்டிருக்கிறோம். பூர்வா பூர்வமாய் இந்த ஸ்தலம் புலிப்பாணிபாத்திர உடையாரைச் சார்ந்தது. சிவபிராமணாள் ஐந்து பேருக்கும் இது காரணஸ்தலமானபடியால் விருமநம்பி, விஜயநம்பி, வாலநம்பி, கோசல நம்பியென்றும் நாமகரணமிட்டு கொடுமுடி சரஸ்வதி அய்யனை கலஸ்தாபிதம் ஸ்தவராச பண் டிதர் என்னும் காரணப் பெயரிட்டு காயாசம் பஞ்சகொத்து தாவடமும் கொடுத்து நன்மை தின்மைகளில் புலிப்பாணிபாத்திர உடையார் ஆதீனத்திற்கு நடக்கிற ஆறுகால் பீடம் அபிஷேக மரியாதைகளில் சில மரியாதையும் கொடுமுடி குருக்களுக்கு கொடுத்து சுவாமி காரியங்களில் யாதொரு விக்கினம் வராத படிக்கு புலிப்பாணிபாத்திர உடையாருக்கு முன்பாக பண்டாரங் களையும், நம்பிமார்களையும் வரவழைத்து நம்பிக்கை வீராங்கிக் கொடுத்து இவர்களுக்கும் கோவில் வேலைக்காரர்களுக்கும்,

புலிப்பாணிபாத்திர உடையாரை மேல் விசாரணை செய்து வரும் படிக்கும், சுவாமி நிவேதனம், புண்யாசனம் பிராமணுளைக் கொண்டு செய்துவரும்படிக்கும், நவராத்திரி பூசைக்காக புலிப் பாணிபாத்திர உடையாருக்கு இருபத்திநாலு பொன்னும், பனி ரெண்டு சலகை நெல்லும், அதற்கு வேண்டிய சாமான்களும் கோவிலிலிருந்து கொடுத்துவரும்படியும் திட்டம் செய்திருக்கி ரேம். மலைக்கோவிலில் அம்மனுக்கு சாத்துபடிக்கு பரிவட்டமும், ஊர்க்கோவிலில் அம்மனுக்கு சாத்துபடிக்கு பாவாடை பட்டுகள், அஸ்மானகிரி, குத்துவிளக்கு, சரவிளக்கு, மணி, தட்டம், தீப முஸ்திதிகள் கொடுத்து அம்பு போட்ட பிறகு வாங்கிக்கொள்ளு கிறது. இந்தப்பிரகாரம் என்றென்றைக்கும் சந்திராள், சூரியாள், கல்லுங் காவேரி, புல்லும் பூமியும் உள்ளவரைக்கும் நடந்துவரும் படியாய்க் கட்டளையிட்டிருக்கிரேம். இந்த தர்மத்துக்கு யாதா மொருவர் வாக்குச் சகாயம், மனச் சகாயம், சரீர சகாயம், அர்த்த சகாயம் பண்ணின பேர்களுக்கு காசியில் கங்கைக்கரை யிலே கோடி சிவலிங்க பிரதிஷ்டை பண்ணின பூசா பலத்தைப் பெறுவார்களாகவும். இதற்கு விகாதம் பண்ணின பேர்கள் கெங்கைக்கரையிலே காராம் பசுவைக் கொன்ற தோஷத்தில் போவார்களாகவும். இந்தப்படிக்கு எழுதின நண்மை பழநியில் கந்தசாமி ஆசாரி.''

இந்தப்படிக்கு மகா-ா-ா-ஸ்ரீ ருமப்ப அய்யர் அவர்கள், மோகர் போடப்பட்டிருக்கிறது.



# திருக்கோயில் வழிபாடு.

( தொகுக்கப்பெற்றது )

**நமது கோயில்.**

கடவுள் எங்கும் நிறைந்த பொருள். உலகத்தில் காணும் ஒவ்வொன்றிலும் அவன் விளங்குகின்றான். இது பொது விதி. சிறப்பாகக் கூறுமிடத்து எந்த இடத்தில் மனம் அன்புகனிந்து இறைவனோடு கூடுகின்றதோ அங்கே கடவுளின் திருவருட் கருணை நிறைந்து நிற்கும். நமது ஆன்றோர்கள் கடவுளை அவ்விதம் காணமுடியாத மக்களுக்காகக் கோயில்களையும் கடவுள் திருவுருவங்களையும் அமைத்துத் தந்தனர். நமது உடம்பு முழுதும் உயிர் கலந்து நிற்கிறது. அவ்விதமிருந்தாலும் சில பாகங்களை நாம் உயிர் நிலையாகக் கொள்வதேபோல, கோயில்களே இறைவன் அருள்பெருகும் இடங்களாகக் கொள்ளவேண்டும்.

நாம் கோயிலில் வழிபடும் இறைவன் ஒருவனே. அவனே சிவன் என்னும் செம்பொருள். கோயிலிற் காணும் மூர்த்தங்கள் யாவும் அவனேயாவன். வெவ்வேறாகக் கருதலாகாது. கணபதி - முருகன் - தக்ஷணாமூர்த்தி - வீரபத்திரர் - வயிரவர் - நடராஜர் போன்ற மூர்த்தங்கள் ஒவ்வொன்றும் இறைவனது ஆற்றல்களையும் தத்துவப் பொருள்களையும் நிரூபிக்கும் தன்மையாக வெவ்வேறான தோற்றங்களுடனும், அந்தந்த பெயர்களுடனும் விளங்குவன. ஆகவே இம் மூர்த்தங்களை அணுகும்போது சிவன் எனவே வணங்குதல் வேண்டும்.

நாம் தோன்றிய காலந்தொட்டு நன்றிக்கும் மரியா தைக்கும் பெயர்பெற்றவர்கள். சாதாரணமாக ஒருவருக் கொருவர் செய்யும் உபகாரங்களுக்காக நன்றியும் மரியா தையும் செலுத்தும் நாம், எல்லாவற்றிலு மேம்பட்டு எல் லாம் செய்தருளும் கடவுளுக்கு நன்றியும் மரியாதையும் செலுத்தக் கடமைப்பட்டவர்களல்லவா? நம்மைப் படைத் தும், காத்தும், உலக வியாபகத்திலேயே சுழன்று அலுத்துப் போகாதவாறு பக்குவம் தெரிந்து அழித்தும் கருணைகாட்டும் பெருமானிடம் நாம் எவ்வளவு நன்றியும் மரியாதையும் காட்டவேண்டும்? சாதாரணமாக நம்மைப்போல, மானிட உருவில் வரும் தாயைப் போலவே, கடவுள் நம்மிடம் எவ்வித பிரதியுபகாரமும் எதிர்பாராது நமக்கு வேண்டிய வைகளை அவ்வக்காலத்தும் கொடுத்துக் காக்கின்ருர். ஆனல் சாதாரண அறிவினலே அதைக் காணமுடியாது. அவரிடம் அன்பைச் செலுத்தி அது மிகுதியாவதற்குத் தக்கபடி அவரைக் காணும் அநுபவம் பெறமுடியும். அதற்கும் படிமுறையாக வழிகள் பல உள. இருந்தாலும் கோயில் என்ற தனி இடத்திற்குச் சென்று வழிபடுவ தாலே நமக்கு அன்பு மிகுதியாகப் பெருக வழியுண்டு என்று நமது முன்னோர்கள் கண்டு அமைத்துள்ளார்கள். உலகில் செய்யும் ஒவ்வொரு தொழிலுக்கும் சிறப்பாக அததற்கும் தனியிடம் நாம் அமைத்துக்கொள்ளவில்லையா? படிக்கப் பள்ளிக்கூடமும், அரசாங்கம் நடத்தத் தனித் தனியாகப் பிரிவு வகைகளும், சாமான் வாங்கக் கடை களும் நாம் அமைத்துக்கொண்டிருக்கிறோமல்லவா? அங்கங்கும் போவதற்கு நியதிகளையும் நாம் திட்டப்படுத்திக் கொண்டிருக்கிறோமல்லவா? அவ்விதமே கடவுளிடம் செல் லுதற்கும் கட்டுப்பாடுகள் நியதிகள் அமைந்திருக்கின்றன.

**கோயிலுக்குச் செல்லுமுறை.**

கடவுளிருக்குமிடம் புனிதமானது. அங்கு எல்லாம் சுத்தமாகவும், அழகாகவும் அமைத்து வைக்கவேண்டும். அப்பொழுதுதான் நம் மனது இறைவனுடன் ஒன்றுபடும். நாமும் அங்குப் போகும்பொழுது சுத்தமாகவும், ஒழுங்காக வும் போய்வரவேண்டும். நன்றாகக் குளித்துவிட்டு அவரவ ருடைய சமயத்திற்குள்ள அடையாளங்களைத் தரித்துக் கொண்டு செல்லவேண்டும். சைவ சமயத்தார்க்கு விபூதி பூசுதலும், உருத்திராக்கம் தரித்தலும் அடையாளங்களாகக் கொள்ளப்படுகின்றன. இதுபோல் திருமண்காப்பு தரித்துக் கொள்ளுதலும், திருத்துழாய்மணிமாலை அணிந்து கொள் ளுதலும், வைணவ சமயத்தார்க்கு அடையாளங்களாம்.

கோயிலுக்குள் போகும்பொழுது உலக விவகாரங் களிலே மனதைச் செலுத்தாமல் நாம் வழிபடச்செல்லும் பெருமானின் திருநாமங்களை உச்சரித்துக்கொண்டு பய பக்தியோடு செல்லுதல் வேண்டும். நாம் பூண்பதும் காண் பதும் நினைப்பதும் ஒன்றாக இருந்தால்தான் நமக்கு நினைத்த எல்லாம் கைகூடும்.

சைவசமயத்தார்கள் விபூதியைத் தண்ணீர்விட்டுக் குழைத்து நெற்றி, மார்பு, தொப்புள், முழங்கால்கள், கைகள், கழுத்து முதலிய இடங்களில் இட்டுக்கொள்வது முறை. அது முடியாதவர்கள் உத்தூளனமாக (தூளாகவே) நெற்றியிலும், மார்பிலும், கைகளிலும் இட்டுக்கொள்ள லாம். கழுத்தில் உருத்திராக்க மாலை அணிந்து செல்லுதல் நன்று. இவ்விதம் சிவவேடதாரிகளாக பஞ்சாக்ஷ ரத்தை உச்சரித்துக்கொண்டே கோயிலுக்குள் செல்லுதல்

வேண்டும். அடியார்கள் திருவாக்காக உள்ள தேவார திருவாசகங்களேயோ, அன்றி அருள்வழிப்பட்ட பெரியோர்கள் இயற்றிய தோத்திரங்களேயோ மனத்தில் சிந்தித்துக்கொண்டும் போகலாம். எந்த நேரமும் 'சிவ சிவ' 'முருகா முருகா' என்னும் திருமறை நாவில் வழுத்திக்கொண்டே யிருக்கவேண்டும்.

வைணவ சமயத்தார்கள் நெற்றி, தொப்புள், மார்பு, நெஞ்சு, வயிற்றின் வலப்பக்கம், இடப்பக்கம், இதுபோல் வலப்புறம், இடப்புறம், வலத்தோள், இடத்தோள், அடிமுதுகு, பிடரி என்னும் இப்பன்னிரண்டு இடங்களிலும் திருமண்காப்புத் தரித்துக்கொள்ளல் முறையாகும். ஆயினும் நெற்றியிலாவது தரித்துக்கொண்டு, 108 திருப்பதிகள் என்கிற பாவனையில் 108 துளசிமணிகளாலாகிய மாலையைக் கழுத்திலணிந்து ஆழ்வார்கள் அருளியுள்ள திருவாய்மொழிப் பாடல்களைச் சிந்தித்துக்கொண்டு செல்வது முறை. குழந்தைகளிடத்தும், குருவிடத்தும், பெரியோர்களிடத்தும் தாம் செல்லும்போது வெறுங்கையுடனே போகாது, தம்மாலியன்ற பூ, பழம் முதலியன கொண்டு போவது போல, எல்லாவுலகத்தையும், உயிர் வகைகளையும் படைத்துக் காக்கும் பெருமானிடம் நம்மால் இயன்ற பொருள்களை எடுத்துச்சென்று பெருமானுக்குச் சமர்ப்பித்து வணங்குதல் முறையாகும். இன்னும், அபிஷேகத்திற்குகந்த இளநீர் - பால் - தயிர் - பழவகைகள் - பன்னீர் முதலியனவும், வழிபாட்டுக்குச் சிறந்த புட்பங்கள், தேங்காய், சூடன், ஊதுவத்தி, சாம்பிராணி முதலியனவும், தீபமிட எண்ணெய், நெய் முதலியனவும் கொண்டு சென்று செலுத்தி வழிபடவேண்டும்.

கோயிலிடங்களைச் சுத்தமாகக் கூட்டுதல், மெழுகுதல், கோலம் போடுதல், திருமுற்றம் திருவீதிகளிலுள்ள புல் முதலியன செதுக்குதல், திருமதில்களிலும், கோபுரத்திலும் உண்டாகும் ஆல், அரசு முதலியவற்றை வேரோடு களைதல், மாலை கட்டுதல், நந்தவனத்தில் தொண்டு செய்தல் முதலிய எல்லாம் செய்யலாம். எல்லாவற்றிற்கும் அவ்வவற்றிற்கு ஏற்றவாறு பொதுவாகப் பலன் உண்டு. அவரவர் சக்திக்கேற்ப மேலே சொல்லப்பட்டவற்றில் எல்லாமோ அல்லது முடிந்த ஒரு சிலவோ அல்லது ஏதாவது ஒன்றோ செய்தல் நலம்.

சிவாலய வழிபாட்டு முறை: முதலில் கோபுர தரிசனம் செய்துகொண்டு பிறகு தலவிநாயகரைத் தரிசிக்க வேண்டும். நம்முடைய வினைகள் தீரவும் பெருமான் வழிபாடு பூர்த்தியாகவும் பிரார்த்தித்துக்கொண்டு தலையில் குட்டிக்கொண்டும் தோப்புக்கரணங்களிட்டும் விநாயகரை வழிபடவேண்டும். இப்பெருமான் சந்நிதியில் தேங்காய்களை விடல் விடுதல் சிறந்தது.

பிறகு கொடிமரத்தடியிற்சென்று வணங்கிக்கொண்டு நந்தியின் பின்புறம் சென்று நந்திபெருமானுடைய கொம்புகளுக்கிடைவழியில் பெருமானைக்கண்டு தரிசிக்கவேண்டும். வலமாக நந்தியின் முன்புரம் சென்று வணங்கி உத்தரவு பெற்று உள்நுழைய வேண்டும். அங்குத் திருவாயிலில் துவாரபாலகரிருப்பர். அவர்களை வணங்கிக்கொண்டு உட்புறம் சென்று பெருமான் சந்நிதியை யடைதல் வேண்டும். அங்கு நின்று நமக்குத் தெரிந்த தோத்திரங்களைச் சொல்லி வழிபட்டு நம்முடைய பிரார்த்தனையைச் செலுத்திக் கொள்ளவேண்டும். பிறகு

வலமாகச் சுற்றுக் கோயிலிலுள்ள நாயன்மார்கள், தக்ஷிணா மூர்த்தி, சோமஸ்கந்தர், சுப்பிரமணியர், மகாலக்ஷ்மி, நடராசர், நவக்கிரகங்கள் போன்ற மூர்த்தங்களையும் வணங்கிக்கொண்டு மூன்றுமுறை சுவாமி கோயிலில் வலம் வருதல் முறையாகக் கொள்ளப்படுகிறது. மூன்றுவது சுற்றில் ஈசானத்தில் அமர்ந்திருக்கும் சண்டீசரைத் தரிசித்து வழிபாடு பூர்த்தியடையும்படிப் பிரார்த்தித்துக்கொள்ளுதல் வேண்டும். பிறகு அம்பிகையாரது ஆலயத்திற்குச்சென்று அங்கும் சந்நிதியில் நின்று தோத்தரித்து வழிபட்டுக் குறைந்தது இரண்டுமுறை வலம்வந்து வெளிவருதல் வேண்டும். மீண்டும் கொடிமரத்தடிக்கு வந்ததும் கீழே விழுந்து நமஸ்கரித்து அங்கு நின்று சுவாமி தரிசனம் செய்து உத்தரவு பெற்றுக்கொள்ளவேண்டும். உத்தரவு பெற்றுக்கொள்ளுமுன் அங்கு அமர்ந்து செபம் முதலியன செய்யவேண்டும். சுவாமி கோவிலிலுள்ள தென்முகப் பரமாசிரியராகிய தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலமர்ந்து பஞ்சாக்ஷரமோ மற்ற மந்திரங்களோ அல்லது தோத்திரங்களையோ உருவிட்டால் மிகுந்த பலன் கிடைக்கும். கொடிமரத்தைத் தாண்டி உள்ளே கீழே விழுந்து நமஸ்காரம் செய்யலாகாது.

இத்துணைக் கருத்துக்களை யறியாதார் ஆலய வழிபாட்டை வெறும் விக்கிரக வழிபாடெனவும், அது மூடர்களுக்கே உரியதெனவும் ஞானிகளுக்கு வேண்டாவெனவும் பிதற்றித் தமது மதியீனத்தை விளம்பரப்படுத்தி இடர்ப்படுவர்; அவரது போதனை சற்போதனையாகாது.

கண்ணப்பர், திருஞானசம்பந்தர், சண்டேசுரர் முதலிய பரம ஞானிகளெல்லாம் சிவலிங்கம் முதலிய திருமேனிகளையே இடமாகக்கொண்டு சிவ வழிபாடு செய்து

பேறுபெற்ற வரலாறு பெரிய புராணம் முதலிய ஞானப் பெருநூல்களில் பேசப்படுதலை நல்லாசிரியர் மாட்டுக் கேட்டுத் தேர்ந்து தெளிந்து சிவாலய, சிவ வழிபாடு செய்து மக்கள் உய்யக் கடவர்.

இங்ஙனம் சிவ வழிபாட்டின் இன்றியமையாமை நோக்கியன்றோ "மத்யார்ஜுனம்" என்ற திருவிடை மருதூரில் தம்மைத் தாமே அருச்சித்துச் சிவபெருமான் உண்மையுணர்த்தினர். ஸ்ரீ காஞ்சிபுரத்திலே உமாதேவி யாரும், திருச்செங்காட்டங்குடியிலே விநாயகக் கடவுளும், திருச்சேய்ஞலூரிலே சுப்பிரமணியப் பெருமானும், திருவீழிமிழலையிலே விஷ்ணுவும், சீகாழியிலே பிரமதேவரும், இந்திரன் முதலாயினோரும் பூசித்துப் பேறுபெற்ற வரலாறு அவ்வப் புராணங்கள் கூறுநிற்கும். மேலே குறித்த தேவர் முதலாயினோரும், முனிவரும், ரிஷிகளும், இராக்கதர்களும், மன்னர்களும் (உயர்திணையேயன்றி, அஃறிணையுயிர்களும்) சிவபெருமானைப்பூசித்துப் பேறுபெற் றமை இருக்கு, யசுர், சாமம், அதர்வணமென்னும் வேத நான்கும், பதினெண் புராணங்களும், விரித்துக் கூறு கின்றன. அவ்விதிப்படி சிவபெருமானைச் சிவாலயத்திலே சிவலிங்க முதலிய திருமேனிகளில் வழிபடுதல் மக்களுக் கெல்லாஞ் சிறந்த கடப்பாடாகின்றது.

**ஆலயம்.**

"ஆலயம்" என்பதன் பொருளாவது: 'ஆலயம்' என்பதை ஆ + லயம் எனப் பிரிக்கலாம். 'ஆ' என்ப தற்கு ஆன்மா என்று பொருள். 'லயம்' என்பதற்கு லயிப்பதற்கு அல்லது சேருவதற்கு உரியது என்பது பொருள். ஆகவே, ஆலயம் என்பதற்கு "கடவுளது

திருவடியில் ஆன்மா லயிப்பதற்கு உரிய இடம்" என்பது பொருள். 'ஆ' என்பது ஆணவமலத்தையும் 'லயம்' என்பது அடங்கியிருத்தலையும் குறிக்கின்றமையான், ஆலயம் என்பதற்கு ஆணவ மலம் அடங்குவதற்குரிய இடம் என்றும் பொருள் கூறலாம். இதற்குக் கோயில் என்றும் ஒரு பெயர் உண்டு. அதனைக் 'கோ + இல்' எனப் பிரித்து, கோ — கடவுள், இல் — தங்குமிடம், கடவுள் தங்குமிடம் எனப் பொருள் கூறுவர்.

எங்கும் நிறைந்து விளங்கும் கடவுளுக்குக் கோயில் எதற்கு என்பார், ஒரு சாரார். பூமியினடியில் எங்கும் வியாபித்திருக்கும் தண்ணீரை நமக்கு உபயோகப்படுத்த வேண்டுமானால், ஒரு கிணறு வெட்டிக் கட்டவேண்டியிருக்கிறது. தண்ணீர் பூமியின் அடியில் எங்கும் நிறைந்திருந்தாலும் கிணற்றிலேயே நமக்குத் தாகவிடாய் தீருகிறது. "எலக்ட்ரான்" (மின்சாரம்) ஆகாயமெங்கும் வியாபித்திருந்தாலும், 'எலக்ட்ரிக் பவர் ஹவுஸ்' (மின்சார நிலையம்) மூலமாகவே நமக்கு அதனை அனுபவிக்க முடிகிறது. இவற்றைப்போல, கடவுள் எங்கும் நிறைந்திருந்தாலும் ஆலயங்களில் விசேஷமாக நின்று அருள் செய்கின்றார். ஆகையால், அவர் அருளைப்பெற ஆலயம் நமக்கு இன்றியமையாததாகின்றது.

இந்து மதக் கோயில்களின் சிறப்புக்கள்: இந்து மத ஆலயங்கள் ஒவ்வொன்றும் முதனூல்களின்படியே இயற்றப்பட்டுத் தத்துவ ஞானத்தை உண்டாக்குவதற்கு இன்றியமையாக் கருவிகளாய் விளங்குகின்றன. கோபுரம், கொடிமரம், பிராகாரங்கள், மண்டபங்கள் முதலியன

சிறந்த தத்துவங்களை விளக்கும்படியே அமைக்கப்பட்டுள்ளன. ஆலயங்களில் நடைபெறும் பஞ்ச சுத்தி, பூசை, நைவேத்தியம், தீபாராதனை, உற்சவம் முதலியனவும் சிறந்த கருத்துக்களை வெளிக்காட்டுவனவாய் இருக்கின்றன. இவைகள் ஒவ்வொன்றும் ஆழ்ந்த சித்தாந்தக் கருத்துக்களை உடையனவாகலின் அவைகள் தக்கார் வாயிலாக கேட்டறிதற்குரியனவாகும்.

கோபுரத்தின் தத்துவம்: கோபுரம் ஸ்தூல லிங்கத்தை உணர்த்துகின்றது. ஆலயங்கள் உலகம் எங்கும் வியாபித்திருக்கின்ற இறைவனது சரீரத்தின் (விராட்புருடன்) அமைப்பில் அமைந்திருக்கிறது. விராட்புருஷனது பாதம் முதல் சரீரம் வரையுள்ள பாகங்களையும், அவனது இதயத்தில் இறைவன் விளங்கும் தன்மையையும் கோயில்கள் நன்குக விளக்குவன. கோபுர தரிசனம் கடவுளது பாத தரிசனமாகும். இதனை பிரம்ம ரந்திர மத்ய கபாலத்வாரம் என்று யோகிகள் கூறுகின்றனர்.

கொடிமரத்தின் தத்துவம்: கொடிமரம் உயிர்கள் தங்குகின்ற சிறையிலிருந்து அவர்களை மீட்பதற்குரிய போரின் வெற்றிச்சின்னமாக விளங்குவது. அதனை அடுத்துள்ளது பலிபீடம். ஆணவமலம் இங்கு அறுபட்ட நிலையைக்காட்டும். அதற்கடுத்துள்ள ரிஷபம் ஆணவக் கட்டிலிருந்து விடுபட்ட ஆத்மாவைக் குறிக்கும். அந்த ரிஷபம் இறைவனை நோக்கியிருக்கும். அதன் கருத்தாவது: இறைவனை அணுக வருவதற்குமுன் உலக முகமாக திரும்பியிருந்த ஆத்மாவானது ஆணவமலத்தினின்று விடுபடுகின்றபோது விடுபடும் ஆன்மா இறைவன் முகமாக இருப்பதைக் காட்டும்.

மண்டபங்கள் உணர்த்துவதாவன: அர்த்த மண்டபம், மகாமண்டபம், தபன மண்டபம், அலங்கார மண்டபம், சபா மண்டபம் என்னும் பல மண்டபங்கள் அவ்வச் செயல்களுக்குரியன என்பதாம். மேற்கூறியவற்றால் ஆலயங்கள் மிகவும் அவசியமானவை என்பதும், ஆலய பாகங்கள் பெரும் தத்துவங்களைக் கொண்டுள்ளன என்பதும் விளங்குகின்றன.

**விக்கிரகம் அல்லது திருவுருவம்.**

விக்கிரகம் என்பது கடவுளின் திருவுருவமேயாம். ஆலயங்களில் காணும் அருட்திரு மேனிகளில் முக்கியமானது சிவலிங்கமாகும். சிவபெருமான் எங்கும் வியாபகமாய் நிற்பினும் சிவலிங்கத்தின்பால் தயிரில் நெய்போல விளங்கி நிற்பர். ஏனைய இடங்களில் பாலில் நெய்போல நிற்பர்.

சிவலிங்கம் என்பதன் பொருள்: சிவம் + லிங்கம் = சிவலிங்கம். சிவம் — கடவுள். லிங்கம் — அடையாளம். கடவுளைக் காட்டும் குறி அல்லது அடையாளம் என்பது பொருள். லிங்கம் என்பதன் விரிந்த பொருள்: லி — லயம், ஒடுங்குதல். கம் — போதல், தோன்றுதல். ஆன்மாக்களும், உலகங்களும் ஒடுங்குவதற்கும் தோன்றுவதற்குமான இடம் என்பது பொருள்.

சிவலிங்கத்தின் அமைப்பு: இந்த அருட்டிருமேனியின் அடிப்பாகத்தில் உடுக்கை போன்ற பீடம் ஒன்று காணப்படும். இதற்கு ஆவுடையென்று பெயர். இதன் மேல் உருண்டு நீண்ட முனையற்ற தண்டொன்று காணப்படும். இதற்குப் பாணம் அல்லது இலிங்கம் என்று பெயர். இவற்றுடன் ஆவுடையின் மேல்பாகத்தில் ஒரு பக்கமாகக் கோமுகம் ஒன்றும் காணப்படும்.

சிவலிங்க உருவம் எதை உணர்த்துகின்றது எனின், சிவலிங்கம் ஒரு ரூபமாக அமைந்திருந்தாலும், அது மற்ற திருமேனிகளைப்போன்று மனித ரூபத்தோடு அமைந் திருக்கவில்லை. அரூபியாகிய இறைவன், மற்றைய ரூபங் களெல்லாம் தோன்றுவதற்கும், இறுதியில் எல்லாம் தன்னுள் லயமாவதற்குமாக ஒரு திருவுருவத்தைக் கொள்ளவேண்டியவனுகிருன். அவ்வாறு அவன் கொண்ட ரூபாரூபமாகிய சதாசிவமே சிவலிங்கமாம்.

சிவலிங்கத்தின் முன்பாகக் காணப்படும் நந்தி அல்லது காளை மாடு உணர்த்துவதாவது: மாடு என்பது சாஸ்திரங்களில் தருப தேவதை எடுக்கும் ரூபம்; ஆதலால், மாடு தர்மத்தை உணர்த்தும். நந்தி எனபதற்கு ஆனந்திப்பது என்றும் பொருள் உண்டு. அதன் வெண்மை நிறம் சாத்வீகத்தையும், அதன் கால்கள் பரம்பொருளாகிய இலிங்கத்தினிடம் கொண்டு சேர்க்கும் சத்குணங்களாகிய சமம், விசாரம், சந்தோஷம், சாது சங்கம் ஆகிய நான்கு ஆத்ம குணங்களையும் உணர்த்தும்.

சத்தி, சிவம், அவற்றின் விளையாட்டு என்ற இவற்றை விஞ்ஞானிகள் சிவம் — Eternal Matter, சக்தி — Energy, விளையாட்டு — Activity, இவற்ருேடு உவமிக்கிருர்கள். சிவ சத்திகளை "கைனிட்டிக் எனர்ஜி" "பொட்டென்ஷியல் எனர்ஜி" என்றும் கூறுவதும் அமையும்.

சிவலிங்கத்தை வழிபாடு செய்கின்றவர்கள் இதன் தத்துவத்தை உணர்ந்து வழிபட்டால் மாத்திமே நன்மை பெறக்கூடுமாகையினுலும் இத்தத்துவங்கள் அன்பர்க ளனைவரும் ஐயந் திரிபற அறிதற்குரியனவாம்.

"விநாயகர்" என்ற பதத்தின் பொருள் தமக்கு மேல் நாயகர் அற்றவர், ஒப்புயர்வற்றவர் என்பதாம்.

விநாயகர் திருவுருவத்தின் அமைப்பு: யானை முகம், ஒடிந்த கொம்பு, பருத்த தொந்தி, இடது கையில் மோதகம், மூஷிக வாகனம் இவற்றுடன் இருக்கும் கோலத்தோடு விளங்குவதாகும். இவர் பரமசிவன்றன் மூத்த குமாரர் என்பது: எல்லாம் வல்ல பரம்பொருளாகிய கடவுளிட மிருந்து முதலாவது உண்டாகிய படைப்பு 'ஓம்' எனும் பிரணவ நாதமேயாகும். அந்த ஓம் எனும் ஒலியின் வரி வடிவமே விநாயகரின் திருவுருவமாம். இறைவனிட மிருந்து முதற்கண் தோன்றியது ஓங்காரப் பிரணவமே ஆகையால் இவர், "பிரணவ கணபதி" என்றும், "ஓங்கார ரூபன்" என்றும், பரமசிவனது மூத்த பிள்ளையென்றும் அழைக்கப்படுகிறார். இன்னும், ஓங்காரத்திற்கு இடப் புறம் மட்டும் ஒரு கோடு உண்டு. வலப்புறம் கோடு இல்லை. விநாயகப் பெருமானுக்கு இடப்புறம் மட்டும் கொம்பு உண்டு. வலப்புறம் இல்லை. ஆகவே விநாயகப் பெருமான் பிரணவ ரூபி என்பது விளங்கும். விநாயகப் பெருமானது திருமேனி அமைப்புக்கு வேறு வகையாக தத்துவம் கூறுவதும் உண்டு. யானைகளில் ஆண் யானைக்குக் கொம்பு உண்டு. பெண் யானைக்குக் கொம்பு இல்லை. விநாயகப் பெருமானது திருமுகத்தில் ஒரு பாற் கொம்பு இருத்தலின் ஆண் என்போமாயின் ஒரு பாற் கொம்பு இல்லை. ஒரு பாற் கொம்பு இல்லாதிருத்தலின் பெண் என்போமாயின் ஒரு பாற் கொம்பு இருக்கிறது. ஆகவே அவரை ஆண் என்றும் சொல்லமுடியாது. பெண் என்றும் சொல்லமுடியாது. அன்றியும் தலை யானைத் தலையாயிருத்தலின் அஃறிணையாம். உடம்பு பூத சரீரமாக

இருத்தலின் உயர்திணையாம்; ஆகவே அப்பெருமானை உயர்திணையென்றும் சொல்லமுடியாது. அஃறிணையென்றும் சொல்லமுடியாது. இவற்ருல் கடவுள் திணை, பால், என்னும் பிரிவுக்கு அப்பாற்பட்டவனென்றும் தத்துவம் விளங்குவதை நாம் தெரிகிருேம். மேலும் உலகத்தில் யானையைக்கட்டும் கயிறும், யானையை அடக்கும் அங்குசமும் பாகனிடத்திலேயிருக்கும். ஆனல் இங்கே பாசமும், அங்குசமும் யானைமுகப் பெருமானிடம் இருக்கின்றன. இதனல் ஏனை யானைகளே பாசத்தாற் கட்டி அங்குசத்தால் அடக்கப்படும். விநாயகப் பெருமானுகிய யானையைப் பாசத்தால் கட்டுவதுமியலாது, அங்குசத்தால் அடக்குவதுமியலாது என்னும் தத்துவம் விளங்குகின்றது.

விநாயகர் சந்நிதியில் எப்படி வணங்குதல் வேண்டுமென்பது: வலக்கையை இடக்கையின் முன் வைத்து வலக்கையால் இடப்புறத்திலும், இடக்கையால் வலப்புறத்திலும் மண்டையில் மூன்றுமுறை குட்டுகளிட்டு, வலக்கையால் இடக்காதையும், இடக்கையால் வலக்காதையும் பிடித்துக்கொண்டு மூன்றுமுறை தோப்புக்கரணமிட்டு விநாயகர் தோத்திரம் கூறி வணங்குதல் வேண்டும்.

ஏன் இவரை இவ்வாறு வணங்குதல் வேண்டும் என்பது: ஒரு குற்றவாளி தான் செய்த குற்றத்திற்குத் தண்டனை தானே விதித்துத் தானே அனுபவித்தல்போலக் கடவுளின் சமீபத்தில் செல்லுவதற்குத் தகுதியில்லாதபடி குற்றங்கள் நிறைந்த மக்கள் தாம் செய்த குற்றத்திற்குத் தாமே தண்டனைகள் செய்து அனுபவிக்க மேற்கூறியவாறு செய்து, மேல் அவ்விதம் குற்றங்கள் செய்யமாட்டோம்

என உறுதிசெய்துகொள்ளுகிறார்கள். எந்த காரியங்களைத் தொடங்கும்போதும் விக்கினங்கள் ஏற்படுமானால் விக்கினங்களை நீக்கியருளவேண்டுமெனவும் விநாயகரை வணங்குகிறார்கள்.

"முருகன்" என்ற பதத்தின் பொருள்: முருகன் என்பதற்கு முருகினையுடையவன் என்பது பொருள். முருகு என்பதற்கு அழகு, இளமை, மணம், தேன், கடவுட் தன்மை என்பன பொருள்களாம். ஆகவே, "முருகன்" என்ற பதம் என்றும் அழியாத அழகினையுடையவன் என்றும், என்றும் மாறாத இளமையினை உடையவன் என்றும், என்றும் நீங்காத நறுமணத்தையுடையவனென்றும், தேன் போன்று இனிக்கின்றவனென்றும், பரிபூரணக் கடவுட்டன்மை நிறைந்துள்ளவன் என்றும் பொருள்படுகிறது. நம்முடைய அழகு, இளமை முதலியன என்றும் நிலைபெற்று நிற்பவையல்ல. ஆனால், முருகன்றன் அழகு, இளமை முதலியனவோ என்றும் நிலைபெற்று நிற்பன.

இன்னும் முருகனுக்கு வேறு பெயர்களும் உண்டு: இவருக்குக் குகன் என்ற ஒரு பெயர் உண்டு. இப்பெயர் மலைக்குகையில் வசிப்பவன் என்று பொருள்படினும் அன்பர்களது உள்ளமாகிய குகைகளில் உறைபவன் என்று பொருள்படும். சுப்பிரமணியன் என்ற பெயர் சுத்த பிரமத்தினின்றும் தோன்றிய மணி போன்றவன் எனப் பொருள்படும். குமாரன் என்ற பெயர் அழகில் மன்மதனை ஜயித்தவன் எனப் பொருள்படும். கந்தன் என்ற பெயர் உமாதேவியாரால் சேர்க்கப்பட்டவன் என்றும், நறுமணத்தினையுடையவனாயும், நறுமணத்தை நமக்குத் தருபவனாகவும் இருக்கின்றான் என்றும் பொருள்படும்.

சச்சிதானந்தன் என்ற பெயர் சத்தும் சித்தும் சேர்ந்த வழிப்பிறக்கும் ஆனந்தத்தினை நிகர்த்தவன் என்று பொருள் படும். இவருக்கு வேலாயுதன், சண்முகன் முதலிய பல வேறு பெயர்களும் உண்டு.

முருகனது திருவுருவத்தின் அமைப்பு: ஆறு முகங்கள், பன்னிரண்டு கரங்கள், அழகிய கூர்மையான வடிவேல் இவற்றைக்கொண்டு, வள்ளி, தெய்வயானை என இரு சக்திகள் சமேதராய் விளங்குவதே முருகனது உருவத் தோற்ற அமைப்பாம். வள்ளிநாயகி அம்மையார் இச்சா சக்தியாகவும், தெய்வயானை அம்மையார் கிரியா சக்தியாகவும், வடிவேல் ஞான சக்தியாகவும் முருகனிடம் திகழ்கிறார்கள்.

முருகன் ஆறுமுகம் கொண்டதாவது: பரமேசுவரனுக்குள்ள ஐந்து முகத்தோடு அதோ முகத்தினையும் கொண்டு முருகன் ஆறுமுகனாயினன். சிவத்துக்குரிய ஐந்து முகத்தினையும், சக்திக்குரிய ஒரு முகத்தினையும் கொண்டு ஆறுமுகனாயினன் எனவும், நான்கு திசைகளையும் மேல் கீழிடங்களையும் நோக்கி அனைத்தையும் பரிபாலனஞ் செய்ய இறைவன் அறுமுகனாயினன் எனவுங் கூறுப.

துவார பாலகர்கள் யார்? அவர்களை என் வணங்க வேண்டும்? என்பது இவர்கள் ஆண்டவர் சந்நிதிக்கு மெய்க்காவலாளர்கள். ஆண்டவனிடம் பத்தி விசுவாசம் கொண்டவர்கள். சாதாரண அதிகாரிகளைக் காணவேண்டுமென்றாலே வாசலில் உள்ள காவலாளர்களின் உத்தரவைப் பெறுகிறோமல்லவா? அதேபோல, உலகத்திற்கெல்லாம் தலைவரான இறைவனைக் காணச் செல்லும்போது, மெய்க் காவலாளர்களிடம் உத்திரவு பெற்றுக்கொண்டுதானே

செல்லவேண்டும். அவர்களிடம் உத்திரவு கேட்கும் முறையாவன: "அடியேன் உட்சென்று இறைவனை வணங்குவதற்கு அநுமதி செய்தருளும்" என்பதாகும்.

நடராஜர் திருவுருவத்தின் அமைப்புக்களானவை: இவ்வருட்டிருமேனி ஒரு மனிதன் நடனமாடும் ரூபமாக அமைந்திருக்கிறது. வலக்காலைக் கீழே ஒரு அரக்கன் மேல் மிதித்து இடக்காலை மேலே உயர்த்தி, ஓர் இடக்கையால் தூக்கிய பாதத்தைக் காட்டி, மற்றைய இடக்கையில் அக்கினி தாங்கி, ஒரு வலக்கையில் அபயஹஸ்தமாக வைத்து, மற்றொரு வலக்கையில் உடுக்கினைப் பிடித்து நிற்பதாக இத்திருவுருவம் அமைந்துள்ளது.

நடராஜர் நடனமாடிக் கொண்டிருப்பதாவது? அணுக்களைப்பற்றி ஆராய்ச்சி செய்கின்ற விஞ்ஞானிகள் "அணுக்களெல்லாம் ஏக தாளத்தில் ஆடிக்கொண்டிருக்கின்றன" என்பதைக் கண்டு, அதற்குரிய காரணம் என்ன என்பதை ஆராய்ந்து பார்க்க, காரணம் காணமுடியாது கலங்கினர். அதன்பின் நமது தெய்வம் நடனமாடிக்கொண்டிருக்கின்றது என்பதைக் கேட்டு வியந்த அந்த விஞ்ஞானிகள் இங்கு வந்து இதனைக்கண்டு சென்றுள்ளார்கள். அணுக்கள் இயங்க அண்டங்கள் இயங்குகின்றன. அண்டங்களை இயக்க ஆண்டவனும் நடனமூர்த்தியாயிருக்கவேண்டும். ஆதலினலேயே நடராஜர் திருமேனி நடனமாடும் ரூபமாக விளங்குகிறது. மனிதர்களுடைய நோக்கம், துக்கம் நீங்கிச் சுகம் அடையவேண்டும் என்பதேயாகும். நாம் ஆனந்தமடைய ஆனந்தமூர்த்தியை வணங்குதல் வேண்டும். அவர் ஆனந்த நடனம் புரிவதால் எப்பொழுதும் ஆனந்தத்தோடு விளங்குகிறார் என்பது தெரிகிறது.

பொன்னம்பலவாணன் திருக்கூத்து உலகுயிர்க்கு வேண்டும் ஐம்பெரும் அருள் தொழிலினைக் குறிப்பது. ஐம்பெரும் தொழில்களாவன: படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்பன. அவற்றுள் முன்னைய மூன்று உலகும் உடல்களில் நிகழ்வன. பின்னைய இரண்டும் உயிர்களில் நிகழ்வன. இவ்வுண்மையினை உணர்த்தவே அவற்றை முறையே கைகளிலும் கால்களிலும் வைத்துக் காட்டுகின்றனன். நாத தத்துவத்தினின்றும் உலகமுண்டாகின்றது என்னும் உண்மையை வலக் கையில் காணும் ஓசைதரும் உடுக்கை அடையாளத்தால் விளக்குகின்றது. வலப்பால் மற்றோர் திருக்கை அஞ்சே லென்றருளும் அடையாளத்தால் காத்தலும், இடக்கையில் காணும் தீச்சுடரின் அடையாளத்தால் துடைத்தலும் ஆம் என்ப. இடப்புறத்துக் கீழ்க்கரம் குஞ்சிதபாதமாகிய இடது திருவடியைக் காட்டுகின்றது. அது பிறவிப் பெரும் பிணியில் வருந்தும் உயிர்களே! உங்கள் பிறவியை நீக்கிப் பேரானந்தப் பெருநிழல் தருவம்; இங்கே சரண் புகுங்கள் என்னும் அநுக்கிரகத்தைக் காட்டுகின்றது இந்த தத்துவம். முயலகன் மாட்டு ஊன்றிய வலத்திரு வடியால் மறைத்தலும், எடுத்தருளும் இடத்திருவடியால் அருளலும் புலனும். இவ்வுண்மை:

> "தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பிற்
> சாற்றியிடு மங்கியிலே சங்காரம் — ஊற்றமா
> ஊன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதம்முத்தி
> நான்ற மலர்ப்பதத்தே நாடு."

என்னும் உண்மை விளக்கம் முப்பத்தைந்தாம் திருப் பாட்டாற் காண்க.

"இனி நடராஜப் பெருமானது திருக்கண் பார்வை சிறிது இடப்புறம் சாய்ந்து சிவகாம வல்லியாரை நோக்கிய முறையாக இருக்கும். இதன் தத்துவம் நடராஜப் பெருமானது பஞ்ச கிருத்திய நடனப்பயனைக் குழந்தைப் பருவத்திலுள்ள உயிர்கள் ஒரு சேர அடையும் ஆற்றலுடையன வன்மையின், அதனை அம்பிகை பாற் காட்டி அம்பிகை வாயிலாக உயிர்களாகிய நமக்கு அருள் புரிதலாம். சிவகாமி அம்மையார் கண்டு களிக்க சிவ பிரான் நடனமியற்றுவதன் தத்துவம் இதுவேயாகும். இதனைச் சிதம்பர மும்மணிக்கோவை உவமையில் வைத்துப் "பாலுண் குழவி பசுங்குடர் பொறுதென், நோயுண் மருந்து தாயுண்டாங்கு" என்று விளக்குகின்றது."

சத்தி: கடவுளுக்குப் பிரியாவிடை உண்டென வைத்து வழிபடுவதன் நோக்கமாவது: கடவுளின் அருளா கிய சத்தியினையே தேவியென வைத்து வழிபடுகின்றோம். அந்தச் சத்தி இல்லையானல் கடவுளுமில்லை. சூரியன் தன் ஒளியைக்கொண்டு இருளை ஓட்டி வெளிச்சத்தைக் கொடுப் பதுபோல, இறைவனும் உயிர்களின் மயக்கத்தை சத்தி யைக் கொண்டு ஒழித்து, உயிர்களுக்கு மெய்யறிவினைத் தருகின்றான். விளக்குச் சுடரில் தீயுமிருக்கிறது, சூடு மிருக்கிறது. தீயிலிருந்து சூட்டினையோ சூட்டிலிருந்து தீயி னையோ பிரிக்கமுடியாதபடி அவை ஒன்று சேர்ந்திருக் கின்றன. அதுபோல, ஆண்டவனிடமிருந்து சத்தியையோ ஆண்டவனையோ பிரிக்கமுடியாது. "அருளது சத்தியாகும் அரன்தனக்கு, அருளையன்றித்தெருள் சிவமில்லை, அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை" என்னும் சிவஞானச் சித்தி யாரும் இதனையே கூறுகிறது.

திருமால் அல்லது மகாவிஷ்ணு யாரென்பது: ஏக நாயகன் உலகத்தைப் படைத்து, அளித்து, அழிக்கக் கொண்ட மும்மூர்த்திகளில் காத்தல் தொழிலைக்கொண்ட மூர்த்தி இவர். ஆலயங்களில் இவரது திருவுருவத்தை நின்ற திருக்கோலமாகவும், இருந்த திருக்கோலமாகவும், ஆதிசேஷ சயனத்திற்கிடந்த திருக்கோலமாகவும், வைத்து வணங்கப்படுகிறது. இப்பெருமான் சயனங்கொண்டிருக்கும்பொழுது உலகு உயிர் அனைத்தும் அவரது திருவயிற்றிலே அடங்கியிருப்பதாம்.

இவரது திருவுருவத்தின் அமைப்பு: ஒரு கையில் பாஞ்ச சன்யம் என்ற சங்கினையும், மற்றொருகையில் சுதர்சனம் என்ற சக்கரத்தினையும், ஒரு கையில் நாந்தகம் என்ற கதையினையும் இவர் கொண்டிருக்கிறார். ஒரு கை அபயஹஸ்தமாக அமைந்திருக்கிறது. மார்பில் கௌஸ்துப மணியினையும், ஸ்ரீவத்ஸம் என்ற திருவினையும், நெற்றியில் கஸ்தூரி திலகத்தையும் கொண்டிருக்கிறார்.

இப்பெருமான் கொண்டருளிய அவதாரங்களில் கிருஷ்ணவதாரம் மக்கள் மனத்தை மிகக் கவர்வது. இந்த மூர்த்தம் பக்கலில் பசு நிற்க அப்பெருமான் குழல் வாசிக்கும் வடிவத்தில் அமைத்துள்ளது. இதன் தத்துவமாவது: உயிர்களெல்லாம் இறைவனை விட்டு நீங்கி உலகத்திலே மனம் போனவாறு சென்று உலக போகங்களை அநுபவித்து இறைவனை மறந்து திரிகின்றன. இந்த நிலை பசுக்கள் தம் தலைவனை நீங்கி மேய்ச்சற் காட்டில் தம் மனம் போனவாறு போய் புல்லை மேய்ந்து சிதறி நிற்கும் நிலைக்கு ஒத்திருக்கின்றது. மாலைக்காலமானதும் ஆயன் குழலை ஊதியதும் அவையெல்லாம் தம் தலைவனாகிய

அவனிடம் வருகின்றன. அதுபோல, இறைவனும் பிர பஞ்சத்திலே திரிந்து நடக்கும் ஆன்மாக்களைத் தன்னிடம் சேர்த்துக்கொள்ளும் தத்துவத்தை இம்மூர்த்தம் விளக்கு கின்றது.

**ஆலய வழிபாடு செய்யும் முறை.**

மேற்குறித்தவாறு சுத்த நீரில் தேக சுத்திகள் செய்து சமய சின்னங்களணிந்து கோயிலின் பக்கத்திற் சென்ற தும், கை, கால்களைக் கழுவிக்கொண்டு, கோபுரத்தின் முன்சென்று நின்று இரண்டு கரங்களையும் தலைமேல் குவித்து மூல மந்திரத்தை உச்சரித்துக் கொண்டும், அருட்பாக் களைப் பாடிக்கொண்டும், வேறு விசாரங்கள் ஒன்று மில்லாமல், கோபுரத்தை தூல இலிங்கமாகவும், கடவுள் பாதங்களாகவும் பாவித்து வணங்கிக் கோயிலுட் போக வேண்டும். கொடிமரத்தின் பக்கத்திற் சென்றதும் ஆண்கள் அஷ்டாங்க வணக்கமும், பெண்கள் பஞ்சாங்க வணக்கமும் செய்தல் வேண்டும்.

அஷ்டாங்க வணக்கமாவது: தலை, செவியிரண்டு, கையிரண்டு, புஜங்கள் இரண்டு, மோவாய்க்கட்டை ஆகிய எட்டு அவயவங்களும் பூமியிற் படும்படி வணங்குதலாம். பஞ்ச அங்க வணக்கமாவது: தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு, ஆகிய ஐந்து அவயவங்களும் பூமியிற் படும்படி வணங்குதலாம்.

கொடிமரத்தைக் கண்டதும் இறைவனை யடைந்தவர் அழிவற்ற ஆனந்தத்தில் நிலைத்திருப்பார் என நினைந்து கொடிமரத்தை சூக்ஷ்மலிங்கமாக எண்ணி வணங்க வேண்டும்.

கொடிமர தரிசனம் செய்தபின்னர், மூல மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மூன்றுதரம் வலம் வந்து வணங்கி உட்செல்லுவதற்காக பலி பீடத்தின் அருகிற் செல்ல வேண்டும். பலி பீடத்தின் அருகிற் சென்றதும் நம்மிட மிருக்கும் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாத்சரியம் என்பவற்றைப் பலி கொடுத்ததாக உறுதி பண்ணவேண்டும்.

பிரதட்சணம் செய்யும்போது யாது நினைத்தல் வேண்டு மென்பது: ஐந்து பிராகாரங்களையும் அன்னமய கோசம் முதலிய பஞ்ச கோசங்களாக மதித்து ஒவ்வொரு கோசத் திலும் ஆன்மா உழன்று தெளிந்து அதை விடுத்து மேலே செல்வதாக நினைக்க வேண்டும். இங்ஙனம் ஐந்து பிராகாரங் களையும் கடந்தால் கடவுளது சாமீப்ய பதத்தை அடைய லாம் என்னும் உண்மையையும் உணர்தல் வேண்டும்.

**இறைவன் வணக்கம்.**

இறைவனை துதிக்குங்கால் நாம் அவரிடம் ஒரு பொருளையோ, பல பொருளைக் குறித்தோ வேண்டுவது அவசியமற்றதாகும். ஏனெனில், அவன் நமக்கு வேண் டுவன வேண்டியாங்கு ஈவானுகின்றுன். சர்வ சீவன் களின் நலங்களை தனது அறக்கருணையாலும், மறக்கருணை யாலும் அவனே ஆற்ற வல்லவன். யாவையும் அறியும் ஆற்றலுடையவனும் அவனே. ஒரு தந்தை தனது அருமைக் குழந்தை கேட்டதெல்லாவற்றையும் கொடுப்ப தாக நாம் அறிவோமில்லை. அவனுக்கு எச்சமயத்தில் வேண்டுவதோ அதனைத் தருகின்றுன். அதேபோலுந்தான் இறைவனுமாகின்றுன்.

விநாயகர்: கோயிலில் விநாயகரது ஸ்தானம் கன்னி மூலையாகும். இவர் முன் தேங்காய் விடலை எறிவதன் காரணமாவது: நாம் செய்த குற்றங்கள் பாவங்களாக உருண்டு திரண்டு உருக்கொண்டு நிற்கின்றதாகத் தேங்காயைப் பாவித்து, அது விநாயகர் வணக்கத்தால் உடைந்து சிதறினது என நினைந்து விடலை யெறிந்தும், மேல் அவ்வகைப் பாவங்கள் செய்யாதிருப்போம் என நினைந்து கொள்ளுதற்காகும்.

விநாயகர் வணக்கம் முடிந்தபின்னர் நந்தி தரிசனம் செய்தும், துவார பாலகர்கள் தரிசனம் செய்தும், சந்நிதியிற் சென்று நின்று இறைவனை வணங்கித் தோத்திரப் பாக்கள் கூறுதல் வேண்டும். இங்குத் தேங்காய், பழம் முதலிய நிவேதனப் பொருள்களைக் கொடுத்து நிவேதிக்கச் செய்யலாம். அருச்சனையும் செய்விக்கலாம். கற்பூர தரிசனம் செய்து பிரசாதம் வாங்கித் தரித்துக்கொண்டு மூலத்தான மூர்த்தியை நன்றாய் மனதில் பதியவைத்து, எலும்புகளெல்லாம் நெக்குநெக்குருகக் கண்ணீர் அருவிபோலப் பாயக் கசிந்து கசிந்துருகித் துதித்து வெளிவரல்வேண்டும்.

பின்னர், அம்பிகை சந்நிதியிலும் அவ்வாறே வணங்குதல் வேண்டும். அதன்பின் உட்பிராகாரங்களிலிருக்கும் ஒவ்வொரு மூர்த்தியையும் வணங்கிக் கொண்டே வலம் வருதல்வேண்டும்.

தக்ஷிணாமூர்த்தி முன்னர் வணங்கும் முறையாவது: தக்ஷிணாமூர்த்தி திருவுருவம் பரமேசுவரன் குருவடிவாகக் கல்லாலின்கீழ், சனகர் முதலிய நால்வருக்கு உபதேசஞ் செய்ய எழுந்தருளிய குருமூர்த்தமாகும். அவர், தம் சுட்டு

விரலைப் பெருவிரலோடு சேர்த்து மற்ற மூன்று விரல்களை யும் அகலவிட்டுக் காட்டும் சின்முத்திரையால் உயிர்கள் ஆணவம், கன்மம், மாயையாகிய மூன்றினையும் அகற்றிக் கடவுளை அடைதல் வேண்டும் என உபதேசிக்கின்றார். ஆதலால், அவர் சந்நிதியடைந்த நாம் இறைவனைக் குரு வாய்ப் பாவித்து வணங்கவேண்டும். அவர் உபதேசிக் கின்றபடி ஆணவம், கன்மம், மாயைகளை அகற்றி இறை வனையடைய முயலுதல்வேண்டும்.

சண்டேசுவரரை வணங்கும் முறையாவது: சண்டேசுவரர் கோயில், கோயிலில் வலப்பாகத்தில் சிறிய தோர் இடைவழி விட்டு அமைக்கப்பட்டிருக்கும். மூலத்தானத்தில் சாத்திய மாலையும், நைவேத்ய மிச்சமுமே இங்குப் பூசைக்குரியன. சண்டேசர் என்பது ஒரு பதவி. இப்பதவியிலிருப்பவரே சிவபூசையின் பயனை நமக்குத் தரும் அதிகாரியாவார். இப்போது இப்பதவியில் இருப் பவர் சிவபெருமான் திருவருள் பெற்ற அடியார் தலைவர். எப்போதும் சிவத்தியானத்திலேயே இருப்பவர். இவரைக் கோயில் தரிசனம் அனைத்தும் முடிந்த பிறகு வணங்குதல் வேண்டும். சிவத்தியானத்திலிருக்கும் இவர் சிவபெரு மானின் திருச்செவிக்குறிப்பு ஆகும்படி கையால் கொட்டி அவர் நம்மைப் பார்ப்பதாய் மதித்துச் சிவதரிசனப் பலனைத் தருமாறு பிரார்த்திக்கவேண்டும்.

சிவபெருமான் ஒருவரே நம்மோடு என்றும் தொடர்பு உடையவர். நமக்கு நம்மினும் இனியவராக உள்ளவர். அவருக்கே நாமெல்லாம் உடைமைப்பொருள். அவருக்கே நாமெல்லாம் மீளா அடிமை.

இன்னும் இம்மனித சரீரம் அப்பர் அடிகள் கூறிய படி ஒரு பெரு வாய்ப்பு. "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி, மதித்திடுமின்" என்றார். பெறுதற்கரிய இப்பிறவி இது இக்கணம் இருக்கும், இக்கணம் நீங்கும் என்று அறிதற்கு அறியாத நிலைமையையுடையது. ஆதலால் நாம் இடையறுது எக்காலமும் நம் சிவபெருமானிடம் அன்பு செய்தல் வேண்டுவதாகும் என்பதும் அவரது பொன் மொழியாகும்:

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே."

கோயில் வழிபாடனைத்தும் முடிந்தபிறகு யாது செய்தல் வேண்டுமென்பது: கொடி மரத்திற்குச் சற்றுதூரம் விலகியிருந்து மூல மந்திரத்தை நூற்றெட்டு முறையோ அதற்கு மேற்படவோ ஜபித்து, தாம் கண்ட இறைவன் திருவுருவத்தை நினைத்து, எங்குச் சென்றிருந்து தியானிப் பினும் புறக்கண்ணால் கண்ட திருவுருவம் அகக்கண்ணால் காணும்படி ஆக்கிக்கொள்ளுதல் வேண்டும்.

மூல மந்திரங்களாவன: சிவத் தியானத்திற்குரிய மூலமந்திரம் "ஓம் நமசிவாய". என்பதாம். இதைப் பஞ்சாக்ஷரம் எனக் கூறுவர்.

விஷ்ணு தியானத்திற்குரிய மூலமந்திரம் "ஹரி ஓம் நமோ நாராயணாய" என்பதாம். இதனை அஷ்டாக்ஷரம் எனக் கூறுவர்.

சுப்பிரமண்ய தியானத்திற்குரிய மூலமந்திரம் "ஓம் சரவணபவாய" என்பதாம். இதனை ஷடாக்ஷரம் எனக் கூறுவர்.

இவ்வாறு ஆலய வழிபாடுகள் செய்யும்போது ஒவ்வொரு மூர்த்தியின் முன்னும் பாடவேண்டிய தோத்திரப்பாக்களை பாடுவதற்காக பின் பக்கங்களில் அருட்பாக்களும், பிற தோத்திரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

**விநாயகர் தோத்திரம்.**

முன்னவனே யானை முகத்தவனே முத்திநலம்
சொன்னவனே தூய்மைச் சுகத்தவனே—மன்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையஞ் சேகரனே
தற்பரனே நின்தாள் சரண்.

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்—விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினாற்
கண்ணிற் பணிமின் கனிந்து.

* * *

**சிவபெருமான்.**

எல்லா வுலகமு மானாய் நீயே
ஏகம்ப மேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மை யறிவாய் நீயே
ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைக ளறுப்பாய் நீயே
புகழ்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வந் தருவாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ

* * *

பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி, யுள்ளொளி பெருக்கி,
யுலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே! சிவபெரு மானே!
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தே
னெங்கெழுந் தருளுவதினியே!

* * *

**உமாதேவி.**

சுரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி
உத்தரியத் தொடித்தோள் போற்றி
கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம் போற்றி
இரும்புமனங் குழைத்தென்னை யெடுத்தாண்ட
அங்கயற்கண் ணெம்பிராட்டி
அரும்புமிள நகைபோற்றி யாரணநூ
புரஞ்சிலம்பு மடிகள் போற்றி.

**முருகன்.**

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

* * *

பன்னிரு கரத்தாய் போற்றி
　　பசும்பொன்மா மயிலாய் போற்றி
முன்னிய கருணை யாறு
　　முகப்பரம் பொருளே போற்றி
கன்னிய ரிருவர் நீங்காக்
　　கருணைவா ரிதியே போற்றி
என்னிரு கண்ணே கண்ணு
　　ளிருக்குமா மணியே போற்றி.

*　　　*　　　*

உன்னை யொழிய வொருவரையும் நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தி வாழ்வே.

*　　　*　　　*

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
　　உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
　　உறவுகல வாமை வேண்டும்
பெருமைபெறும் நினதுபுகழ் பேசவேண்டும் பொய்ம்மை
　　பேசா திருக்க வேண்டும்
பெருநெறி பிடித்தொழுகவேண்டும் மதமான
　　பேய் பிடியா திருக்க வேண்டும்
மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டும்
　　உனை மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற
　　வாழ்வில்நான் வாழ வேண்டும்

தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

* * *

ஏழைக் கிரங்குதெய்வ மென்றுன்பால் வந்தடைந்தேன்
ஏழைக் கிரங்க இதுதருணம் — ஊழைவென்ற
சீலமுனி வோர்போற்றுந் தென்பழநி வெற்பிலுறை
நீல மயில்முருகா நீ.

* * *

**நடராசர்**

ஆதியாய் நடுவுமாகி யளவிலா வளவுமாகிச்
சோதியா யுணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகிப்
பேதியா வேகமாகிப் பெண்ணுமா யாணுமாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி.

* * *

மாற்றறியாத செழும்பசும் பொன்னே
மாணிக்கமே சுடர் வண்ணக்கொழுந்தே
கூற்றறியாத பெருந்தவருள்ளக்
கோயிலிருந்த குணப்பெருக்குன்றே
வேற்றறியாதசிற் றம்பலக்கனியே
விச்சையில் வல்லவர் மெச்சும் விருந்தே
தூற்றறியாதவென் சாற்றுங் களித்தாய்
தனிநடராசவென் சற்குருமணியே.

**தக்ஷிணாமூர்த்தி — தென்முக பரமாசிரியன்.**

மும்மலம் வேறுபட் டொழிய மொய்த் துயிர்
அம்மலர்த் தாணிழல் அடங்கும் உண்மையை
கைம்மலர்க் காட்சியிற் கதுவ நல்கிய
செம்மலை யலதுளஞ் சிந்தியா தரோ.

**சண்டேசுவரர்**

பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த
புனிதற் கமைக்கும் பொருளன்றி,
மின்னுங்கலனு டைகள்பிறவும் வேறு
தனக்கென் றமையாமே,
மன்னுந் தலைவன் பூசனையின் மல்கும்
பயனை அடியார்கள்,
துன்னும் படிபூ சனைகொள்ளும் தூயோ னடித்
தா மரைதொழுவாம்.

**திருமால்**

பச்சைமா மலைபோல்மேனி பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா! அமரர் ஏறே ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவைத் தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகரு ளானே.

**இலக்குமி**

உலகம் புரக்கும் பெருமான்றன் உளத்தும் புயத்து மமர்ந்த
உவகை யளிக்கும் பேரின்ப வுருவே எல்லாம்
உடையாளே
திலகஞ் செறிவா ணுதற்கரும்பே தேனே கனிந்த
செழுங்கனியே
தெவிட்டா தன்பர் உளத்துள்ளே தித்தித் தெழுமோர்
தெள்ளமுதே

மலகஞ் சுகத்தேற் கருளளித்த வாழ்வே யென்கண் மணியேயென்
வருத்தந் தவிர்க்க வருங்குருவாம் வடிவேஞான மணி விளக்கே
சலகந் தரம்போற் கருணைபொழி தடங்கண் திருவே கண்ணமங்கை
தாயே சரணஞ் சரணமிது தருணங் கருணை தருவாயே.

**நால்வர்.**

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர் திருத்தாள் போற்றி.

**வாழ்த்து.**

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக!
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக மும்துயர் தீர்கவே.



பழநி பாதவிநாயகர் கோயிலும், அன்பர் திரளும்.

# கோயிலில் அன்பர்களும் நிர்வாகிகளும் கவனிக்கவேண்டுவன.

கடவுள் எல்லோரையும் படைத்துக் காப்பவர். அவருக்கு நாம் மக்களாவோம். அவரிடம் நன்றியும் பத்தியும் காட்டவேண்டியது நமது கடமையாகும். அவ் விதம் செய்தால் அவரவர்கள் பக்குவத்திற்கேற்ப வேண் டிய வேண்டியாங்கு எல்லாம் பெறலாம்.

**கோயிலை வைத்துக்கொள்ளும் முறை.**

இறைவன் தூய்மையே உருவானவன். தூய்மை தங்குமிடத்தில் இறைவன் தங்குகிறான். அங்கு அழகு பொலிகின்றது. அன்பு மலிகின்றது. மனம் இலயிக்கின்றது. இன்பம் பெருகுகின்றது. அதற்காகவே எப்பொ ழுதும் நம் திருக்கோயில்களில் பாட்டும் ஆட்டமும், வாத்தியங்களின் இன்னொலியும், மணி முழக்கமும், தீபத்தின் ஒளியழகும், மலர்களாலும் திருவாபரணங்களா லும் அலங்காரமும், விழாவும், கொண்டாட்டமுமாக வருவோர் மனத்தைக் கவரத்தக்க நிலையில் அமைத்து வைத்தனர் அறிவில் மிக்க நம் பெரியோர்.

ஆகவே இறைவன் உறையுமிடமாகிய திருக்கோயில் களும் மிகப் பரிசுத்தமாகவும், அழகாகவும் வைத்திருக்க வேண்டிய இடங்களாக ஆகின்றன. அவ்விதம் தூய்மைக்கு உறைவிடமான கோயிலிடங்கள் சுத்தமாக வைக்கப்பட்டிருக்கவேண்டும். அங்கு உபயோகமாகும் பரிவட்டங்களும் மற்ற உபகரணங்களும் தூய்மையாக இருக்கவேண்டும். மனதைக் கவரும்படி மலர்களாலும், திருவாபரணங்களாலும், திருவுருவங்களை அலங்கரித்து வைத்திருக்கவேண்டும். அப்பொழுதுதான் காண்போர் மனம் குவியும்; கவர்ச்சியுறும்.

நமது கோயில்களோ பிறசமயிகளின் கோயில்களைப் போல அமைக்கப்படவில்லை. மற்றக் கோயில்களில் எண்ணெய், நெய், பால் முதலிய அபிஷேகம் கிடையாது. எண்ணெய் விளக்குங் கிடையாது. அங்கு தண்ணீர்ப் புழக்கமும் கிடையாது. ஆகையால் இயல்பாக அங்கு சுத்தமாகவே இருக்கும். நமது கோயில்களில் காலத்திற்குக் காலம் அபிஷேகம் அலங்கார நைவேத்தியம் ஆராதனைகள் நடைபெறும். எப்பொழுதும் எண்ணெய் விளக்குகள் சோதியிடும். அவ்விதம் அமைந்திருக்கும் கோயில் இடங்கள் அழுக்குப் படவும், குப்பைகள் சேரவுங்கூடும். ஆதலின் அவைகளை அவ்வப்பொழுதும் சுத்தஞ்செய்யச் சிப்பந்திகள் இருப்பார். அவர்களும் நம்மவர்களே. ஆகையால் கூடியவரை நம்மால் கோயிலிடங்களில் குப்பை கூளங்கள் சேராதபடி நாம் பார்த்துக்கொள்ளவேண்டும்.

தூய்மைக்குப் பிறப்பிடமான கோயில்களில் ஒட்டடை சேராமலும் விளக்குப் போடுமிடங்களை அவ்வப்பொழுதும் சுத்தஞ் செய்தும் வைக்கவேண்டும். சுவர்கள் தரை முதலியவற்றில் அழுக்குத் தங்காமல் சுத்தஞ் செய்ய வேண்டும். அடிக்கடி செங்கற் சுவர்களில் மாத்திரமே வெள்ளையடித்து சுத்தமாக வைத்து வரவேண்டும். கற்சுவர், தூண், சிலா ரூபங்களின்மீது அறவே வெள்ளையடித்தலாகாது. நீரால் கழுவி, சுத்தமாக வைத்தல்வேண்டும். பரிவட்டங்களை அவ்வப்பொழுதும் வண்ணார்களிடம் போட்டு வெளுத்து நனைத்து உலர்த்தி மடியாக வைத்துக் கொண்டு திருவுருவங்களுக்கு உடுத்த வேண்டும். கோயில்களில் புழங்கும் குருக்கள் பிராமணப்பிள்ளை முதலியோரையும் சுத்தமாக ஆடையுடுத்தச் செய்யவேண்டும். அவர்கள்

சமய ஒழுக்கத்துக்கு எடுத்துக்காட்டாக இருக்கவேண்டியவர்களாதலின் அவர்கள் சுத்தமாக சிவ வேடதாரிகளாக மற்றையோர் கண்டதும் மரியாதை செய்யக்கூடிய விதத்தில் இருக்கவேண்டும். பிரசாதங்கள் எடுத்துவரும் பாத்திரங்களும் தயார் செய்யுமிடங்களும் சுத்தமாக வைத்திருக்கவேண்டும். கால பூசைகள் குறிப்பிட்ட நேரத்தில் நடத்தப்படவேண்டும். பொது மக்களுக்கு சந்நிதிகளில் விபூதி பிரசாதங்கள் வழங்கப்படவேண்டும். அதுவும் பித்தளை அல்லது வெள்ளிமடல்களில் வைத்து வழங்கவேண்டும். யாவரிடமும் அன்பாகப் பழகவேண்டும். அபிஷேக நீர் தங்குமிடங்களும், தீர்த்தக்கரைகளும் சுத்தம்செய்யப்பட்டு சுகாதார நிலைக்கு ஒத்தவாறு வைக்கப்படவேண்டும். எங்கும் பிரகாசமாக, ஒளி விளங்க, இருள் தலைகாட்டாத நிலையில் வைத்திருக்கவேண்டும். அவ்விதம் வைப்பது கோயில் சிப்பந்திகளால் மாத்திரம் முடியாது. வழிபடும் மக்களாகிய நம்மாலியன்றமட்டும், அவ்விதமிருக்கும்படி செய்து உதவவேண்டும். அப்பொழுதுதான் அவ்விடங்கள் தூய்மையாக இருக்கும். இறைவன் அருள் பெருகும். நாம் நினைத்தவற்றை நினைத்தபடி பெறலாகும்.

## வாழ்த்து.

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீர் அடியா ரெல்லாம்.
வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவநீதி விளங்குக வுலக மெல்லாம்.

தென்னா டுடைய சிவனே போற்றி !
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி !

## சில குறிப்புகள்.

**பக்கம் 36 :** தேவஸ்தான வருமானம் **1357-**ம் பசலிக்கு சுமார் ரூபா **3,47,900.** செலவு சுமார் ரூபா **1,72,360.** சமீபத்தில் தேவஸ்தானத்தார் பல திருப்பணிகளை தொடங்கியிருத்தல் போற்றப்பெறுவதாகும். இதனைத் தொடர்ந்தே, திருமலை, திருப்பதி போன்று, பத்தர்கள் தங்குதற்கான போதிய இடவசதிகளைச் செய்து கொடுப்பார்களாக.

**பக்கம் 37 :** திருவாபரணங்கள் முதலியன இன்னும் சமீபத்தில் திரு. வா. வே. கா. ரு. முருகேச முதலியார் அவர்களால் ஆண்டவர் மலைவெளிப் பிராகாரத்து பவனி வருவதற்கான முறையில், சுமார் ரூபா அறுபதாயிரம் செலவில் ஒரு அழகிய தங்க இரதம் செய்து ஆண்டவருக்கு உரிமையாக்கியுள்ளார்கள். இவர்களது பேரன்பும் தெய்வ உணர்ச்சியும் போற்றுதற்குரியவையாகும். இதனை **10—6—1948-**ஆம் நன்னாளில் மலையின்மீது வெளிப்பிராகாரத்தில் திருவுலாக் கொணரப்பெற்றது (படம் பார்க்க).

தேவஸ்தானத்தார் பிரதோஷ புறப்பாடு உபயோகத்திற்காக வெள்ளியில் ஒரு ரிஷப வாகனமும், பெரிய மயில் வாகனமும் சமீபத்தில் செய்துள்ளனர். இன்னும் மற்ற மர வாகனங்களையும் வெள்ளியிலேயே செய்து வைக்கின் நலமாகும். பத்தர்கள் இவ்வரிய பணிகளைப் போற்றுவதாகும்.

**துர்க்கை பிரதிட்டைகள் :** திரு. வா. வே. கா. ரு. முருகேச முதலியார் அவர்கள் வடக்குமலைக் கிரிபிராகாரத்தில் வீர துர்க்கையையும், தெற்கில் அகோர மங்கையையும் பிரதிட்டை செய்துள்ளனர். வரத்தாற்று பாறைமீது பிரம சண்டியையும், சாது சாமிகளது மடத்திற்கெதிரில், மகிஷாசூர மர்த்தனியையும், பிரதிட்டை செய்ய ஏற்பாடாகிறது. இவ்விதமாக இறைவியின் நற்கருணை இவர்கள் மூலமாக பத்தர்களுக்குக் கிடைப்பதாகின்றது போற்றப்பெறுவதாகும்.

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 16 | விறைந்திருந்தனர் | நிறைந்திருந்தனர் |
| | 20 | தரிசித்த மக்களின் | தரிசித்த பேறு மக்களின் |
| 9 | 25 | நடந்தேரியது | நடந்தேறியது |
| 17 | 11 | திருப்பணி கர்த்தர்கள் | திருப்பணிக் கர்த்தர்கள் |
| | 15 | முருகன்வேள் | முருகவேள் |
| 29 | 4 | எடுப்புவித்த | எடுப்பித்த |
| 30 | 9 | நடைந்துள்ளது | நடந்துள்ளது |
| 31 | 4 | நிருவாக பொறுப்பாளர் | நிருவாகப் பொறுப்பாளர் |
| | 14 | C. R. முருகேச முதலியார் | V. V. C. R. முருகேச முதலியா |
| | 6 | முதலியாரவர்களாலும் | முதலியாரவர்களும் |
| | 16 | கொள்கின்றன | கொள்கின்றனர் |
| 32 | 2 | இலவகை | இலங்கை. |
| | 5 | பெறுகின்றது | பெறுகின்றன |
| | 12 - 13 | சிவகாம பாடசாலை | சிவாகம பாடசாலை |
| 40 | 13 | குரக்கனமாடும் | குரக்கினமாடும் |
| | 26 | இதுகாணும் | இதுகாறும் |
| 43 | 10 | தனமையர் | தலைமையர் |
| 47 | 7 | இப்பூவுலத்தில் | இப்பூவுலகத்தில் |
| | 22 | ராஜ்யசேவப் பிரிவினை | ராஜ்யசேவப் பிரவீன. |
| 47 | 30 | தொடுக்கப் | தொகுக்கப் |

## திருப்புகழ், திருமுறை சைவ சித்தாந்த சபையின் உறுப்பினர்.

---

**தலைவர் :**

ஸ்ரீலஸ்ரீ சாது சுவாமிகள்.

**உதவித் தலைவர்கள் :**

சிவத்திரு. சைவ சித்தாந்த சரபம் ஈசான சிவாசாரியர்.

திரு. V. S. வேணுவுடையாக் கவுண்டர்,
சங்கரண்டாம்பாளையம் பட்டக்காரர்.

,, ராவ்பகதூர் I. T. ஓபளக்கொண்டம நாயக்கர் ஐயன்,
ஜமீன்தார், ஆயக்குடி.

,, ராவ்பகதூர் K. S. லஷ்மிபதி நாயக்கர்,
ஜமீன்தார், இடையகோட்டை.

**பொருட் காப்பாளர் :**

,, V. V. C. R. முருகேச முதலியார், பழநி.

**செயலாளர் :**

,, K. சிதம்பரம் பிள்ளை, B. A., B. L., எக்ஸிகியூடிவ் ஆபீசர்.

**உதவிச் செயலாளர்கள் :**

,, ப. கிருஷ்ணசாமி பண்டாரம்,
டிரஸ்டி, ஸ்ரீ பட்டத்து விநாயகர் கோயில், பழநி.

,, R. M. K. சிவசுப்பிரமணியம், சித்த வைத்தியமணி, பழநி.

**உறுப்பினர்கள் :**

திரு. M. P. மங்கல கவுண்டர், மிராசுதார், பழநி.
,, S. முத்துசாமி முதலியார், B. A., வக்கீல், ,,
,, C. P. சாமி, சித்த வைத்தியர், ,,
,, V. S. பாலராமலிங்கம் செட்டியார், ,,
,, ராவ்பகதூர் R. குருசாமி நாயுடு, உடுமலை.
,, A. M. இராஜலிங்கம் செட்டியார், கோயம்புத்தூர்.
,, K. வெங்கிடபதி நாயுடு, சிங்காநல்லூர்.
,, R. பாலசுப்பிரமண்ய துரைராஜ் நாட்டாள்வார்.
,, R. அய்யாத்துரை முதலியார், இரட்டயம்பாடி ஜமீன்.
,, D. J. இராமசாமி நாயுடு, B. A., B. L., பழநி.
,, K. சண்முகசுந்தர நாடார், மிராஸ்தார், பழநி.
Dr. N. இராமசுப்பிரமணிய அய்யர், பழநி.
திரு. R. S. A. இராமகிருஷ்ணன் செட்டியார், திருவனந்தபுரம்.

## பழநி ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி தேவஸ்தானம் மலைக்கோயில் காரியாலயத்தில் கட்டவேண்டிய கட்டணங்களின் விபரம்.

| | | |
|---|---|---|
| ரூ. 1-முதல் ரூ. 20-வரை பெறுமான பஞ்சாமிர்த அபிஷேகம் செய்ய | ரூ. | 2—4—0 |
| ரூ. 20-முதல் ரூ. 100-வரை பெறுமான பஞ்சாமிர்த அபிஷேகம் செய்ய | ,, | 3—4—0 |
| ரூ. 100-க்குமேல் பெறுமானமுள்ள ஷை அபிஷேகம் செய்ய | ,, | 6—4—0 |
| ஷை பஞ்சாமிர்த அபிஷேக சொர்ணபுஷ்பம் | ,, | 1—0—0 |
| பால் சந்தனம் விபூதி அபிஷேகம் செய்ய | ,, | 0—4—0 |
| ஷை அபிஷேகங்களுக்கு சொர்ண புஷ்பம் | ,, | 0—4—0 |
| இராஜ அலங்காரம் ,, | ,, | 3—0—0 |
| வேட அலங்காரம் ,, | ,, | 3—0—0 |
| சாத்துப்படி பரிவட்டம் ,, | ,, | 0—4—0 |
| அலங்கார பரிவட்டம் ,, | ,, | 1—0—0 |
| கலியாண காணிக்கை | ,, | 1—4—0 |
| தீர்த்தக் காணிக்கை | ,, | 1—4—0 |
| திருவிளக்குக் காணிக்கை | ,, | 0—4—0 |
| சூலக் காணிக்கை | ,, | 0—4—0 |
| சத்திய காணிக்கை | ,, | 1—4—0 |
| தலைச்சுமை அபிஷேக சாமான் தூக்குக்கூடை 1-க்கு | ,, | 0—0—3 |
| காவடி 1-க்கு | ,, | 0—0—6 |

தங்கக் கவச சாத்துபடி ஒவ்வொரு கிருத்திகைதோறும் றும் விசேஷங்கள்தோறும் ஆண்டவருக்கு தேவஸ்தானத் ரால் சாத்தப்பெறும்.

### மலைக்கோயில் பூசா காலங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| திருவனந்தல் (விஸ்வரூப தரிசனம்) | | முற்பகல் | 6 | மணி |
| முதல் காலை விழா பூசை | | ,, | 7-15 | ,, |
| சிறுகாலை சந்தி | ,, | ,, | 8 | ,, |
| காலை சந்தி | ,, | ,, | 9 | ,, |
| உச்சிக்காலம் | ,, | நடுப்பகல் | 12 | ,, |
| சாயுரட்சை | ,, | பிற்பகல் | 6 | ,, |
| அர்த்த சாமம் | ,, | இரவு | 8 | ,, |

# தேவாலய தரிசனமுறை.

ஆலயத்திற்குச் சென்று கடவுளை வழிபடுகின்றவர் குளித்துத் தூய்மையான ஆடை உடுத்துத், திருநீறு தரித்து அருச்சனை அபிஷேகம் முதலியவற்றிற்கு வேண்டும் பொருள் எடுத்துக்கொண்டு, ஆலயத்தைச் சமீபித்தவுடன், கோபுரத் வணங்கி, நந்தி, மயில்வாகனம், கொடிமரம் இவற்றுக்கு இப் வணங்கி, வலம்வந்து, உள்ளே சென்று ஆண்டவன் திருமுன் தோத்திரங்களைச் சொல்லி, மனம் கசிந்துருகி வழிபட்டு, . சனை முதலிய செய்வித்துத், திருநீறு பெற்றுத் திருப் வேண்டும். கோயில் அமைதியைக் கெடுக்கும்படியாக எ உரக்கப் பேசியோ, வேறுவிதமாக நடந்தோ, கோயில் பாட்டைத் தடை செய்யலாகாது.

**திருக்கோயிலிலே செய்யத் தகாதன:**

ஆசாரமில்லாது போதல், கால் கழுவாது போதல், எ உமிழ்தல், மலசலங்கழித்தல், மூக்குநீர் சிந்துதல், பாக்கு றிலை போடுதல், சுருட்டுப் பிடித்தல், நந்தி பலிபீடம் முதல அமைக்கப்பெற்ற உயர்ந்த இடத்திலே உட்காருதல், தூங் படுத்துக்கொண்டிருத்தல், காலை நீட்டிக்கொண்டிருத்தல், கோதி முடித்தல், சிரசிலே தலைப்பாகை தரித்தல், தோ அங்கவஸ்திரம் போட்டுக்கொள்ளுதல், போர்த்துக்கொள் நிருமாலியத்தை மிதித்தல், வீண்வார்த்தை பேசுதல், சிரி சண்டையிடுதல், விளையாடுதல், சூதாடுதல், சுவாமி, பலி நந்தி, இடபம், மயில் என்னும் இவைகளுக்குக் குறுக்கே ே முதலியனவாம். **இத்தகைய செயல் கோயிலின் தூய்மை குறைக்கவும், கோயிலை இழிவுபடுத்தவும் ஆகியவை. ஆகைய அவைகளை ஒருபொழுதும் மறந்தும் செய்யலாகாது.** தி கோயிலிலே சென்று கடவுளை வழிபடுதலாகிய புண்ணியத் தேடவந்தவர்கள் அங்கே போய் மேலே காட்டிய குற்றங்க செய்வது, குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வதற் பாகும். இங்குக் காட்டிய முறைகளை அன்பர்கள் அனுச ஆண்டவன் அருளைப் பெறுவார்களாக.

